BENSONS2/NGB-101C TAM

# அவள் கல்யாணத்தில் எங்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி

ஆம், மிகவும் மகிழ்ச்சியடைந்தோம். எங்களது சொற்பமான வருமானத்தில் சீதாவுக்கு இவ்வளவு நன்றாக கல்யாணம் நடக்குமென்று யார்தான் எதிர்பார்த்தார்கள் ?

பல வருஷங்களுக்கு முன் நண்பர் ஒருவர் மாதா மாதம் ஒரு சிறு தொகையை நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் சேமித்து வரும்படி எங்களை தூண்டினார்.

நாங்கள் போடும் தொகை சிறிதாக இருந்ததால் அதை அவர்கள் வாங்கிக் கொள்வார்களோ என்றுகூட சந்தேகமடைந்தோம். ஆனால் அதுதான் இல்லை.



நீங்கள் ஐந்து ரூபாய்களைக் கொண்டு ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கை ஆரம்பித்து விடலாம். ஆம், ஐந்தே ரூபாய் இருந்தால் போதும்.

அதோடு மட்டுமில்லை, ஆண்டுதோறும் 4% வட்டியும் சேர்ந்து உங்கள் சேமிப்பு வளரும்.

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸில் எப்பொழுதும் மரியாதையும் திறமையான சேவையும் உங்களுக்கு கிடைக்கும். அது மிகவும் நல்ல பாங்க் என்பதை நீங்களே உணர்வீர்கள்.

இன்றே நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கின் கிளைக்கு சென்று பாருங்கள்.

***நீங்களும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கும் உற்ற நண்பர்களாகி விடுவீர்கள் !***

## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

பிரிட்டனில் இணைக்கப் பெற்றது . அங்கத்தினர்களின் பொறுப்பு அளவிடப்பட்டது.

அசோஸியேடட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்கு லிமிடெட். நேஷனல் புரொவின்ஷியல் பாங்கு லிமிடெட்

**கிளைகள் : சென்னை : 3. நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு. (லாயிட்ஸ் கிளை); 6. அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி : 44. பீச் ரோடு; ஹைதராபாத் : அபித் ரோட்**

டோக்கன் இல்லை...








காத்துக்கிடக்கும் அலுப்பும் இல்லை...



உங்கள் செக்குகள் உடனடியாக
ரொக்கமாக்கித் தரப்படும்:




அதனை ஈடேற்றுவது எமது நவீனமயமான

# டெல்லர் திட்டம்

## பஞ்சாப் நேஷனல் பாங்க்

உற்பத்திவளம்: தன்னுற்றலை நம்பிவாழ ஒரே வழி.

PR-PNB-6625 TA/2

# கல்கி  பொருளடக்கம்

பராபவ, கார்த்திகை 12 ■ நவம்பர் 27



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

நினைவுத் திரையில்......




**டிராம் டிரைவர்:** ஏய் ரிக்ஷா! நீ என்ன செவிடா? மணி அடிக்கிறது காதிலே விழலே? ஓரம் போப்பா!

**ரிக்ஷாக்காரன்:** உன் டிராம் போடற சத்தத்திலே நீ மணி அடிக்கிறது எங்கே ஐயா காதிலே விழுது? — சாமா

கல்கி, டிசம்பர் 15, 194-


எஸ்.கே.பாட்டீல்
"என் நண்பர்களே என்னைக் கவிழ்த்து விடுவார்கள் போலிருக்கிறதே!"

உதவி! உதவி!!
"இன்றும் உல
நாடுகளில்
எல்லாம்
நமது குரல்
ஒலிக்கிறது.
PK

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 17



# உணவு மந்திரி வெளியிட்ட உண்மை

அமெரிக்கா சென்ற ஆண்டில் செய்ததுபோல் இந்த ஆண்டு நமக்கு உணவுப் பொருள் அளித்து உதவாது என்று தெரிகிறது. அதற்குக் காரணம் நம் மீது அவர்களுக்கு அனுதாபம் குறைந்து போனதல்ல. நம்மைப் போலவே இன்னும் சில சோஷலிஸ நாடுகள் அமெரிக்காவில் யாசகம் கேட்கப் போய் விட்டதால், அதன் உணவு தானியக் கையிருப்புக் குறைந்து போய்விட்டது என்று உணவு மந்திரி திரு சி. சுப்பிரமணியம் மக்கள் சபையில் எடுத்துக் கூறியிருக்கிறார்.

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் பிச்சை எடுக்கப் போகிற நாடுகள் எல்லாம் சோஷலிஸ நாடுகளே தவிர மற்ற நாடுகள் அல்ல!

சோஷலிஸ நாடுகள் என்று மந்திரி குறிப்பிடும் நாடுகள் எல்லாம் உண்மையில் கம்யூனிஸ நாடுகள்தான்.

கம்யூனிஸக் கொள்கையைக் கடைப்பிடிக்கும் நாடுகளில் எல்லாம் மக்களுக்கு ஜீவாதாரமாகத் தேவைப்படும் உணவு உற்பத்திதான் பாதிக்கப்படுகிறது. விவசாயம் கெட்டு, மக்கள் பஞ்சத்தில் அவதியுற நேர்கிறது.

சில ஆண்டுகளுக்கு முன்னால் அமெரிக்காவுக்குத் தங்கத்தைக் கொடுத்து உணவு தானியத்தை வாங்கிக் கொண்டது ருஷ்யா.

கானடாவிலும் ஆஸ்திரேலியாவிலும் சில ஆண்டுகளாக உணவு தானியம் வாங்கி வருகிறது சீனு.

ஆகவே கம்யூனிஸத்தினால் — ருஷ்ய பாணியாயினும் சரி, சீன பாணியாயினும் சரி — மக்களுக்கு ஜீவாதாரமான உணவை அளிக்க முடிவதில்லை என்பது நிரூபணமாகி விட்டது. நமது காங்கிரஸின் ஜனநாயக சோஷலிஸம் படுதோல்வி அடைந்து, அமெரிக்காவிலிருந்து உணவு தான்யம் வரவில்லையானால் மக்கள் பஞ்சத்தாலும் பட்டினியாலும் மடிய வேண்டியதுதான் என்ற நிலைக்கு நாடு வந்து விட்டது. அதாவது காங்கிரஸின் ஜனநாயக சோஷலிஸமும் அப்பட்டமான கம்யூனிஸமே என்பது உறுதியாகிவிட்டது.

சில நாட்களுக்கு முன் சுதந்திரக்கட்சியின் பொதுக் காரியதரிசி திரு மஸானி இந்த உண்மையைத் தமக்கே உரிய தனித்த முறையில் வெளியிட்டார். "நம் நாட்டில் ஒரு கம்யூனிஸ்ட் கட்சியோ, இரண்டு கம்யூனிஸ்ட் கட்சிகளோ இல்லை. மூன்று கம்யூனிஸ்ட் கட்சிகள் இருக்கின்றன. ஒன்று வலது சாரி; மற்றது இடதுசாரி; மூன்ருவது: காங்கிரஸ்" என்ருர்.

அது எவ்வளவு உண்மை என்பது காங்கிரஸ் வகுத்துள்ள விவசாயக் கொள்கைகளிலிருந்தும், அதன் விளைவுகளிலிருந்தும் மிக மிகத் தெளிவாகி விட்டது.

தென்னகத்தில் அபரிமிதமான புயலும் மழையும் ஏற்பட்டுப் பயிர்ச் சேதமும், வடநாட்டில் வான் மழையின்றி வறட்சியால் பயிர் கருகிச் சேதமும் ஏற்பட்டதால் எதிர் காலம் மிகவும் பயங்கரமாக இருக்கிறது என்று மந்திரி சி. சுப்பிரமணியம் அவர்கள் ஒரு மணி நேரத்துக்கு மேலாகப் பேசி அங்கலாய்த்திருக்கிருர்.

இவ்வளவு பரந்த நமது நாட்டில் எங்கேயாகிலும் ஒரு பக்கம் அதிவிருஷ்டியோ அல்லது அநாவிருஷ்டியோ அல்லது வெள்ளப் பெருக்கமோ ஏற்பட்டு உணவுப் பஞ்சம் ஏற்பட்டு விடுவது சகஜம். அந்தச் சமயங்களில் தேசத்தின் மற்றப் பகுதி மக்கள் தாங்களாகவே மனமுவந்து உணவு தான்யம் அனுப்பிப் பஞ்சத்தை இட்டு நிரப்புவது உண்டு. ஆனுல் இப்பொழுது ஜில்லாவுக்கு ஜில்லா, கிராமத்துக்குக் கிராமம் உணவு தான்யப் போக்குவரத்துக்குத் தடை விதித்து உண்மையில் தேவையுள்ளவர்களுக்கு உணவு தான்யம் அனுப்ப முடியாமல் செய்தும் அபரிமிதமாக உள்ள பிரதேசத்தில் கிடங்கில் முடக்கி வைத்துப் புழுத்துப் போகவிட்டும் வருகிருர்கள். இதுதான் உணவு தான்யக் கட்டுப்பாட்டின் லட்சணம்; சோஷலிஸ சர்க்காரின் நிர்வாகத் திறமை!

# என்ன சேதி?

- எகிப்து அளித்த ஏமாற்றம்
- தமிழ் நாட்டில் புயல்
- வடவியட்நாமின் பிரசாரம்
- "நோட்ஸ்" படிப்பு!

ஐ.நா. சபை பந்தோபஸ்து குழுவுக்குச் சமீபத்தில் நடந்த தேர்தலில் எகிப்து, இந்தியாவுக்கு எதிராக ஸிரியா நாட்டுக்கு வோட்டளித்திருக்கிறது.

ஸிரியாவும் எகிப்தும் இரண்டும் சேர்ந்து தான் ஐக்கிய அரபுக் குடியரசு என்று பெயர். ஆனால் ஸிரியா எகிப்தை விட்டுப் பிரிந்து தனியான சுதந்திர நாடாகப் பிரகடனப்படுத்திக் கொண்டு விட்டது. எகிப்து மட்டும் இன்னும் தன்னை 'ஐக்கிய அரபுக் குடியரசு' என்று அழைத்துக் கொள்கிறது. ஸிரியாவுக்கு எதிராக எகிப்து வோட்டளித்திருந்தால் உலகம் நியாயம் எனவே கருதியிருக்கும். எனினும், எகிப்து ஸிரியாவை ஆதரித்துள்ளது!

இந்தியாவுக்குப் பாகிஸ்தானுடன் தாவா உள்ளது போல் எகிப்துக்கு இஸ்ரேலுடன் தாவாவும் சண்டையும் இருந்து வருகிறது. இந்தியாவுக்கு இஸ்ரேலுடன் எந்தவித விரோதமும் பாராட்ட வேண்டிய அவசியம் இல்லாவிட்டாலும் இஸ்ரேலுடன் ஒரு சிறிது நேச பாவத்தைக் காண்பித்தாலும் எகிப்து தவறாக எடுத்துக் கொள்ளுமோ என்று பயந்து எச்சரிக்கையோடு நடந்து வருகிறது! ஆனால் இந்தியா பாகிஸ்தான் முரணில், பாகிஸ்தானுக்கே ஆதரவளிக்கும் ஸிரியாவுக்கு எகிப்து துணிந்து தனது ஆதரவை இந்தியாவுக்கு எதிராக அளித்துள்ளது.

சமீபத்தில் எகிப்து நாட்டின் தலைவர் நாஸர் இந்தியாவுக்கு வந்தபோது, எவ்வளவு அமர்க்களமான வரவேற்பும், உபசாரங்களும் நடந்தன! ஆனால் காரியம் என்று வந்தபோது, எகிப்து இந்தியாவுக்கு எதிராகவும் வேலை செய்யத் தயங்கவில்லை என்பது இப்பொழுது வெட்ட வெளிச்சமாகி விட்டதல்லவா?

சோஷலிஸம் என்றால் 'சமத்துவம்' என்பதுதான் பொருளானால் அதை அரசாங்கம் கடைப்பிடிக்கிறதோ இல்லையோ, இயற்கை அன்னை கடைப்பிடித்து விட்டாள்!

நவம்பர் மாதத் தொடக்கத்தில் தமிழகத்தின் வட பகுதியில் வீசிய புயல் இரண்டாவது வாரத்தில் மற்ற தென் பகுதிகளிலும் வீசித் தமிழகமெங்கிலும் சென்னையிலிருந்து கன்யாகுமரிவரை பெரும் உற்பாதத்தை விளைவித்து விட்டது. ஆறுகள் பெருகிக் கரை புரண்டு ஓடிப் பல உயிர்களை உட்கொண்டன. குளங்கள் ஏரிகள், நிரம்பி வழிந்தும், உடைப்பெடுத்தும், பயிர்களையும் மக்கள்வாழ் குடிசைகளையும் சேதப்படுத்தி விட்டன!

ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் வரும் சேத விவரங்களைப் படிக்கும் போது அன்னையுடைய ஊழிக் கூத்தின் ஓர் ஒத்திகை சமீபத்தில் நிகழ்ந்திருக்கிறதோ என்றுதான் எண்ண வேண்டியிருக்கிறது.

கஷ்ட நிவாரணத்துக்கு நான்கு கோடி ரூபாய் பிடிக்கும் என்று அரசாங்கம் மதிப்பிட்டிருக்கிறது. வீடு வாசல், மாடு கன்றுகள் இழந்த லட்சோப லட்சம் மக்கள் துரிதமாகப் புனர்வாழ்வு பெறவேண்டும்.

டில்லியில் உள்ள வடவியட்நாம் தூதரகம், தென் வியட்நாமில் அமெரிக்கா இழைத்து வரும் 'கொடுமை'களைப் பற்றி ஓர் அறிக்கை தயாரித்துப் பத்திரிகைகளுக்கும், மற்ற தூதரகங்களுக்கும் அனுப்பி வந்ததாம். இதை அறிந்த இந்திய சர்க்கார், இந்தியா நேசமாக உள்ள நாடுகளைப் பற்றி அவதூறாகப் பிரசாரம் செய்வதை அநுமதிப்பதற்கில்லை என்று அவ்வறிக்கையை அனுப்பத் தடை விதித்து விட்டதாம்.

பேஷ்! இந்த ஒரு சமயமாவது இந்திய அரசாங்கம், அமெரிக்கா தனது நேச நாடு என்று உணர்ந்து, ராஜரீக முறைகளை அநுஷ்டிக்க முன்வந்ததே, பாராட்ட வேண்டியதுதான்!

நான்காவது திட்ட இலக்குகளைப் பற்றித் தொழிலதிபர்களும், வர்த்தகர்களும், பொது மக்களும்தான் அதிருப்தி தெரிவிக்கிறார்கள் என்பதில்லை. திட்டக் கமிஷனில் அங்கம் வகிப்பவர்கள்கூட அவை பற்றித் திருப்திப் படவில்லை. சில நாட்களுக்கு முன்பு திரு எஸ். ஜி. பார்வே என்ற அங்கத்தினர், திட்டத்தில் உள்ள குறைபாடுகளை எடுத்துச் சொல்லிக் கவலைப்பட்டார். சமீபத்தில் மற்றோர் அங்கத்தினரான திரு டி. என். ஸிங்—இவர் இரும்பு, எஃகுத் தொழில் துறையின் காபினெட் அந்தஸ்துள்ள அமைச்சரும்கூட—குறைப்பட்டுக் கொள்கிறார். அவர் காணும் குறைகள் முக்கியமாக இரண்டு. அந்நிய உதவியை அளவுக்கு மீறி எதிர்பார்த்துத் திட்டம் தயாரிக்கப்பட்டிருப்பது ஒன்று. பொருளாதார முன்னேற்றம் 'நோட்ஸ்' படித்துக் கல்வி கற்பது போல் சுலபமான வழிகளில் ஏற்பட்டு விடும் என்று ஏமாற்றுகிறார்களே என்பது இரண்டாவது. திட்டம் வகுக்கும் முறைகள், கொள்கைகள் பற்றித் தமது கருத்துக்களை அவர் இவ்வளவு பகிரங்கமாகச் சொல்லுவதிலிருந்து அவரது மனம் எவ்வளவு தூரம் நொந்திருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். திட்டக் கமிஷனுக்குள்ளேயே இவ்வளவு அபிப்பிராய பேதங்கள் இருக்கும்போது, ஆட்சிபீடத்திலேயே ஒற்றுமை என்பது இந்த லட்சணத்தில் இருக்கும்போது, 'எதிர்க்கட்சிகளுக்குள் கருத்து ஒற்றுமை இல்லை, அதனால் அவர்களிடம் ஆட்சியை விட்டால் நாடு பாழாகும்' என்று சொல்லிச் சொல்லி மக்களை காங்கிரஸ் ஏமாற்றிக் கொண்டிருக்கும் விந்தையை என்னென்பது?



# ராஜாஜியின் கருத்துக்கள்

- காமராஜரின் கருத்து
- ஆபாசத்துக்கு அபராதம்
- ஸர் ருஸ்தும் மஸானி
- மணல்மீது கட்டிய வீடு
- யாருக்கு உபதேசம்?
- பெயர் மாற்றம் வேண்டாம்
- உழைக்கும் மனப்பான்மை தேவை

மதுவிலக்குச் சட்டம் ஆங்காங்கு மீறப்படுவதைத் திரு காமராஜ் அவர்கள் பெரிதாக எடுத்துக் கொள்ளாதது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன். மதுவிலக்கினால் விளைந்துள்ள பல அநுகூலங்களை அவர் சரியானபடி மதிப்பிட்டு, அகில இந்தியாவுக்கும் இதை விஸ்தரிக்க வேண்டும் என்று கூறியிருப்பதை வரவேற்கிறேன். இவ்விஷயத்தில் அவர் என்னுடன் இணக்கமான கருத்து கொண்டிருக்கிறார். (வேறு சில விஷயங்களிலும் அவர் சமீப காலமாக என்னுடன் இணக்கம் கொண்டு வருகிறார்.)

மதுவிலக்குச் சட்டம் மட்டுமே மீறப்படுகிறது என்று எண்ண வேண்டியதில்லை. எந்தச் சட்டத்தின் அமுலிலுமே அதை மீறும் உதாரணங்கள் உண்டு. மதுவிலக்கால் சர்க்காரின் கலால் வருமானம் போகிறது என்று சொல்கிற வாதம் எடுபடவில்லை. ஏழை மக்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பொருளை மதுவில் விரயமாக்கச் செய்து தான் சர்க்கார் வருமானம் பெற வேண்டுமென்பதில்லை. அரசாங்க வருமானத்துக்கு எத்தனையோ வழிகள் உள்ளன.

ஆனால் நீண்டகால மதுவிலக்குவாதியான நான் சொல்வதெல்லாம் மதுவிலக்குக் கூடாது என்பவர்களுக்குப் பழசாகப் போன விஷயமாகவே இருக்கும். என்றாலும், முப்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்தது போலவே இன்றும் நான், 'மதுவிலக்கு வேண்டாம், சர்க்காரே லைசென்ஸை ஏலத்தில் விட்டு மது வியாபாரம் செய்ய வேண்டும்' என்பதை எதிர்க்கிறேன். மதுவிலக்கு அமுலாகும் பிரதேசங்களின் பிரத்தியட்ச நிலையைப் பார்த்த பின்னரே இவ்வாறு கூறுகிறேன்.

ஃஃஃ

ஆபாசத்தைத் தடுக்கக் காரிய ரீதியில் இத்தாலி தேசம் செய்து வருவதைப் பார்ப்போம்.

ரோம், நவ. 6

விடர்போ நீதிமன்றம் ஆபாசம் எனத் தீர்ப்புச் சொன்ன 'லெ பொம்போல்' (பொம்மைகள்) என்ற படத்தில் பங்கு கொண்டதற்காக ஜினா லல்லப்ரிஜிடா என்ற சினிமா நட்சத்திரத்துக்கு இரு மாத சிறைவாசமும், 40,000 லீரா (சுமார் 55 டாலர்) அபராதமும் விதிக்கப்பட்டிருக்கிறது. இதே போல் நடிகர் ஜீன் ஸொரெல் டைரக்டர் மவ்ரோ போலோக்னினி, தயாரிப்பாளர் அகோம் லுகாரி ஆகியோருக்கும் தண்டனைகள் வழங்கப்பட்டுள்ளன. இப்போதுதான் ஆபாசமாகக் காட்சி தந்ததற்காக இத்தாலிய சட்ட சரித்திரத்திலேயே முதன் முறையாக நடிகர்கள் தண்டிக்கப்பட்டுள்ளனர். இது வரை தயாரிப்பாளரும் டைரக்டருமே பொறுப்பாளிகளாகக் கருதப்பட்டனர்.

ஃஃஃ

நன்றாகப் பழுத்துத் தொண்ணூறாம் வயதில் ஸர் ருஸ்தம் மஸானி பம்பாயில் நவம்பர் 15ந் தேதி காலமாகி விட்டார். அப்போது அவரது புதல்வர் ஸ்ரீ எம். ஆர். மஸானி சென்னையில் இருந்தார்.

ஸர் ருஸ்தும் அவர்கள் மெத்தக் கற்றவர். வெகு அழகாக எழுதக் கூடியவர். தாதாபாய் நவரோஜி பற்றி அவர் எழுதியுள்ள வரலாறு புகழ்பெற்றது. அன்றைய அரசாங்கம் அளித்த விருதுகள் அவர் பலவிதங்களிலும் மனத்தைச் சீராகச் சம நிலையில் வைத்திருந்ததற்கு அங்கீகாரமேயாகும். அவர் இருந்த காலத்தில் என்னை விசேஷ கவனத்துடன் ஆசீர்வதித்தும் ஊக்கியும் வந்தார். இன்று அவருக்கு என் சொந்த வணக்கங்களைச் செலுத்தி, அவரது வயது முதிர்ந்த மனைவிக்கு அநுதாபங்களை அளிக்கிறேன்.

ஃஃஃ

'ஸாடர்டே ரிவ்யூ'வில் நான் எழுதியுள்ள ஒரு கட்டுரையைப் படித்த நியூயார்க் வாசி ஒருவர், ''சுற்றியுள்ள உலகில் உலகாயதம் பெருகி வரும் போது நாம் எப்படி மனச்சாந்தி பெற முடியும்?'' என்று கேட்டு எழுதியிருக்கிறார். இது என் சிந்தனையைக் கிளறி விட்டது. ''உலகாயதத்தில் ஆழ்ந்துள்ள மக்கள் சொந்த அநுபவத்திலேயே அதன் கசப்பை அறிய விட்டு விடுங்களேன்! நீங்கள் ஏன் உங்கள் மனச் சாந்தியைக் குலைத்துக் கொண்டு அவர்களுக்காகப் பாடுபட வேண்டும்?'' என்று என்னைப் பல இந்திய அன்பர்கள் கேட்கிறார்கள். இதை நினைத்தே நான் சிந்தித்தேன். இவர்கள்

சொல்வது போல் இருக்க முடியாது என்ற முடிவுக்கே வந்தேன்.

இத்தேசத்தில் சுகத்தின் அஸ்திவாரமே பறிக்கப்பட்டு வருகிறது. பொருளாதாரக் கொள்கைகளாலும் ஐம்பத் திட்டங்களாலும் மட்டுமின்றி, தார்மிக உணர்வு நசிந்ததாலேயே அதிக அனர்த்தம் விளைந்துள்ளது. இச்சமயத்தில் மக்களிடமும், நாட்டிடமும் அன்புகொண்ட ஒருவன் எப்படிச் சொந்த அமைதியைத் தேட முடியும்? காரியம் செய்யாமலே இருக்கும் மனோபாவத்தில் பற்று வைத்து விடாதே என்றே கீதாசாரியன் உபதேசித்தான். 'விஷயங்கள் நடக்கிறபடி நடக்கட்டும்; நாம் சும்மாயிருப்போம்' என்கிற நமது தேச மனப்பான்மையை எதிர்பார்த்தே கண்ணன் இவ்வாறு கூறியிருக்கிறான். 'கருமத்தின் பலனில் பற்று வைக்கக் கூடாது; அதே சமயம் கருமம் செய்யாமலிருப்பதிலும் பற்றுக் கூடாது' என்று உபதேசித்தான்.

பைபிளில் இஸையா 'ஜெரூஸலத்தில் தருமம் பிரகாசிக்கும் வரையில் எனக்குச் சாந்தி இல்லை' என்றார். அப்படியே நம்மில் சிலரும் நம் நாட்டில் தருமம் ஒளிவிளக்காகப் பிரகாசிக்கும் வரையில் சொந்தச் சாந்தியைத் தேடாதிருக்க வேண்டும். காந்திஜி நமக்குக் காட்டிய கடமையை மீண்டும் உயிர்ப்பிப்போம்.

கடன் மீதும், வரி மீதும் கட்டும் பொருளாதாரம் மணல் மீது கட்டிய வீடு போலவே. இதில் லாபம் தேடிப் போகாதிருப்போம். இந்தியாவுக்கு அந்நிய நாடுகளில் காந்திஜி தேடித் தந்த தார்மிக ஒளியை மீண்டும் பெறச் சங்கற்பம் கொள்வோம். ஒருவரை யொருவர் நம்புவோம். பூசல்களைத் தவிர்ப்போம். தர்மத்தின்படி எளியவராகவே, ஆனால் பெருமிதத்துடன் வாழ்ந்து இன்பம் காணுவோம்.

ஐம்பது கோடி மக்கள் இவ்விதம் சங்கற்பம் செய்து, உழைத்துத் தம்மால் இயன்றவரை உற்பத்தியைப் பெருக்கினால் நாடு பூலோக சுவர்க்கமாகும். பிறநாட்டார் உற்பத்தி செய்வதெல்லாம் நாமும் உற்பத்தி செய்ய வேண்டும் என்ற ஐம்பத்துக்காகத் தேவையற்ற வீண் போட்டியில் இறங்காமல் இருப்போம். முற்றுகைக்கு ஆளானவர்கள் கோட்டைக்குள் சகல பொருட்களையும் தாமே உற்பத்தி செய்து கொள்வது போல், நாமும் எல்லாவற்றையும் நாமே உற்பத்தி செய்ய முற்பட வேண்டாம்.

நான் கடந்த சில காலமாக ஒன்றையே திரும்பத் திரும்பச் சொல்கிறேன் என்று நினைக்கலாம். உண்மை. ஆனால் அவசியமாகக் கவனித்தாக வேண்டிய விஷயம் ஒன்றே. அந்த ஒன்றையே சொல்கிறேன். மற்றவையெல்லாம் அதைச் சார்ந்தனவே.

சிறுகக் கட்டினாலும் அழுத்தமான அஸ்திவாரத்தின் மீது கட்ட வேண்டும். தர்மத்தின் மீது கட்ட வேண்டும். உலகைத் தரிப்பதால்தான் தருமத்துக்கு அந்தப் பெயர் ஏற்பட்டது. அதுதான் அனைத்தையும்தாங்குவது, உயிர் வாழச் செய்வது.

ஆண்டவனை நாம் அறிய முடியாவிடினும் தருமமே அவனோடு நம்மைப் பிணைக்கும் தொடர்பு. சூரியனின் இயல்பையும், அளவையும் அறிய நமக்கு ஆவல் இல்லாதிருக்கலாம். எனினும், சூரிய வெளிச்சத்தாலேயே நாம் வாழ்கிறோம். அதுவே நம்மைச் சூரியனுடன் தொடர்புறுத்துகிறது. இதே போல் கடவுளை அறிய முடியாவிடினும், தருமத்தில் வாழ்ந்தால் போதும் என்று நினைந்தார் புத்தர். கடவுள், தருமம் இரண்டையும் விட்டால் நாசமாவோம்.

ஃஃஃ

பஞ்ச நிலைமையைச் சமாளித்தாகவேண்டியுள்ளபடியால் எல்லா அரசியல் கட்சிகளும் சமாதானம் செய்து கொள்ள வேண்டும் என்று ஸ்ரீமதி இந்திரா அவர்கள் பேசியிருக்கிறார். இந்தச் 'சமாதான' உபதேசத்தை அவர் காங்கிரஸ் தலைவர்களுக்கே முக்கியமாக வழங்க வேண்டும். ஏனெனில், அவர்களில்தான் ஒவ்வொருவரும் சொந்த முன்னேற்றத்தைக் கருதிச் சமாதானத்துக்கு நேர் எதிரான சூழ்நிலையை உண்டாக்கி வருகிறார்கள்.

ஃஃஃ

'ஹிந்து'ப் பத்திரிகைக்கு 'ஹிந்து' என்ற குறிப்பிட்டதொரு மதப் பெயர் இருப்பினும் அது தேசிய இதழாக உள்ளது. அதன் பெயரை மாற்றும் உத்தேசமும் இல்லை. இது போன்றதே வாரணாசி ஹிந்து சர்வ கலாசாலையின் பெயரில் உள்ள 'ஹிந்து'வும். இதை மாற்ற வேண்டியதில்லை என்று மக்கள் சபை முடிவு செய்தது மிகச் சரி. வரலாற்று முக்கியத்துவத்தைக் கவனியாமல், மேலெழுந்தவாரியாகப் பார்த்துப் பெயர்களை மாற்றுவது அழகல்ல. பெயர் எதுவாயினும் வாரணாசி ஹிந்து சர்வகலாசாலை தேசிய ஸ்தாபனமாகவே இருந்து வரும்.

ஃஃஃ

உழைக்கும் வகுப்பினருக்குப் படிப்பறிவு உண்டாக்குவது அவசியம். ஆனால் அதைவிடப் படிப்பறிவு உள்ளவர்களுக்கு உழைப்பில் ஊக்கம் ஏற்படுத்துவது அவசியம். நன்றாகப் படித்த இளைஞர்களுக்குத் தங்கள் படுக்கையைக்கூட ஒழுங்காகச் சுற்றிக் கட்டத் தெரியாமலிருப்பதையும், ரயில் ஜன்னலை ஏற்றி இறக்கத் தெரியாமலிருப்பதையும் பார்க்கிறேன். அப்போதெல்லாம் எனக்குப் படிப்பிலும் எழுத்திலும் நாம் இவ்வளவு காலம் செலவிடுகிறோமே என்று எரிச்சலாகக்கூட இருக்கிறது. நம் என்ஜினீயர்களுக்குக்கூட உழைப்பு மனப்பான்மை போதவில்லை. ஆசிரியர்களையும் மற்றவர்களையும் பற்றிக் கேட்கவே வேண்டாம். உழைப்பு மனப்பான்மை பொதுவாகப் பரவுவதில் தான் தேச முன்னேற்றம் உள்ளது. இதற்கேற்ப நம் கல்விமுறையை மாற்றி அமைக்க வேண்டும்.

# பெப்ஸோடெண்டின் 'இரியம் ப்ளஸ்'

## உங்கள் பற்களை சுத்தம் செய்து வெண்மை பளிச்சிடச் செய்யும்

எப்படி என்று பாருங்கள் : பெப்ஸோடெண்டில் மட்டுமே அற்புத நுரையை உண்டுபண்ணும் 'இரியம் ப்ளஸ்' உள்ளது. இது விஞ்ஞான முறைப்படி பிரத்தியேகமாக கண்டுபிடிக்கப்பட்ட சேர்க்கைப் பொருளாகும். இதனால் ஏராளமாக அற்புத நுரை உண்டாகி உங்கள் வாயின் உட்புறம் முழுவதையும், பற்களையும் நன்றாக சுத்தம் செய்யும்... பெப்பர்மின்டைப் போல வாய்க்கு குளிர்ச்சியும், புத்துணர்ச்சியும் ஊட்டும். 'இரியம் ப்ளஸ்'ஸின் தனிப்பட்ட சக்தியால் பற்கள் இயற்கை வெண்மையுடன் பிரகாசிக்கும். அற்புத வெண்மை அளிப்பது பெப்ஸோடெண்டின் தனிப்பட்ட தன்மை

இந்துஸ்தான் லீவர்
லிமிடெடின்
ஓர் உன்னத தயாரிப்பு





# செய்திப் படங்கள்

சர்தார் வல்லபாய் பட்டேலின் 91வது பிறந்த தின வைபவத்தை யொட்டிப் புது தில்லி செங்கோட்டையிலுள்ள திவான் — இ— ஆமில் பட்டேலின் உருவப் படத்துக்கு ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் மாலை அணிவித்துக் கௌரவிக்கிறார். படத்தில் திரு கிருபளானியையும் காணலாம்.



ஸ்பென்ஸர் கம்பெனி ஸ்தாபனத்தாரின் சுத்தமான தேன் விற்பனையைச் சமீபத்தில் 'அக்மார்க்' தலைமை அதிகாரி திரு சதுர்வேதி தொடங்கி வைத்தார்.



வள்ளல் பச்சையப்பரின் உருவச் சிலையைக் காஞ்சியில் பச்சையப்பன் கல்லூரியில் அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் இணை வேந்தர் திரு எம். ஏ. முத்தையா செட்டியார் திறந்து வைத்தார். இவ் வைபவத்துக்கு டாக்டர் லக்ஷ்மணசுவாமி முதலியார் தலைமை வகித்தார்.



புதுதில்லியில் சமீபத்தில் பசுவதைத் தடுப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டவர்கள் பார்லிமெண்டுக் கட்டிடத்துக்கு அருகே டிரான்ஸ்போர்ட் பவனில் உள்ள கார்களையும் ஸ்கூட்டர்களையும் எரியவிட்டு அழித்தார்கள்.

# "ஏமாறவந்தோம்; 'மதம்' மாறிச் சென்றோம்"

நவம்பர் ஐந்தாம் தேதியிட்டு ஜேம்ஸ் ஏ. ரூபின் எழுதுகிறார் :

நவம்பர் முதல் தேதி லாஸ் ஏன்ஜெல்ஸிலிருந்து ஸான் ஃபிரான்ஸிஸ்கோவுக்குப் பறந்தோம். மறு நாள் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரி நடைபெற்ற ஸ்டான்ஃபோர்ட் சர்வகலாசாலைக்குப் பக்கத்திலேயே தங்கினோம். சர்வகலாசாலையின் ஆதரவில் நடைபெற்ற இக்கச்சேரியில் 'ஸொகஸுகா' (ஸ்ரீ ரஞ்சனி) 'நின்னுவினா' (நவரஸகன்னட) 'ஸாரஸாக்ஷ' (பந்துவராளி), 'ரகுவம்சஸுதா' (கதனகுதூகலம்) ஆகியவற்றால் ரஸிகர்களை மகிழ்வித்த எம். எஸ். சங்கராபரணத்தில் 'சங்கராசாரியம்' பாடிய போது அவையோர் முற்றிலும் தம் வயமிழந்து விட்டனர். பிறகு தமிழிலும் ஹிந்தியிலும் சிறிய பாடல்கள் சில பாடி முடித்தார். முடிவில் எழுந்து நின்று, இடை விடாமல் கைதட்டினர் அவையோர். எம். எஸ். மீண்டும் பாடவேண்டும் என்பதே அவர்கள் நகராமல் நின்று கொண்டிருந்ததன் பொருள். அவர்களது விருப்பத்தைப் பாடகி நிறைவித்தார். எம். எஸ்ஸையும், பக்கவாத்தியக்காரர்களையும் சூழ்ந்து கொண்டு அன்று பாராட்டியவர்கள் நூற்றுக்கணக்கானவர்.

ஸ்டான்ஃபோர்ட் சர்வகலாசாலை பாலோ ஆல்டோவில் உள்ளது. இது ஸான்ஃபிரான்ஸிஸ்கோவிலிருந்து ஒரு மணிப் பயண தூரத்தில் உள்ளது. நவம்பர் மூன்றாம் தேதி நாங்கள் ஸான்பிரான்ஸிஸ்கோ நகரை அடைந்தோம்.

அடுத்துள்ள கலிஃபோர்னியா சர்வகலாசாலையுடன் இணைந்த பார்க்லி நிலையத்தைச் சேர்ந்த முப்பது தமிழ் மாணவர்கள் ஒரு தமிழ்ச் சங்கத்தை நிறுவியுள்ளனர். இச்சங்கத்தில் நவம்பர் 3ந் தேதி மாலை எம்.எஸ். குழுவினருக்கு விருந்துபசாரம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சுமார் ஐம்பது பெருமக்கள் அழைக்கப்பட்டிருந்தனர். இவர்களில், அமெரிக்காவில் கர்நாடக இசை, பரதநாட்டியம் இவற்றைப் பரப்புவதில் மிகுந்த ஊக்கமும் செயல் துடிப்பும் காட்டி வரும் ஸாமுவேல் ஸ்க்ரிப்ஸ் தம்பதியரைக் குறிப்பிட வேண்டும். ஸ்க்ரிப்ஸ் அவர்கள் தான் எம். எஸ்ஸின் நான்காம் தேதிக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்த கிழக்கத்தியக் கலைச் சங்கத்தின் தலைவர். விருந்து முடிந்ததும் ஸ்க்ரிப்ஸ் பொறுக்கி எடுத்த ஒரு சில வார்த்தைகளால் எம். எஸ். குழுவினரைப் பாராட்டிப் பேசினார். பிறகு நான் பேசினேன். கடைசியில் ஸ்ரீ சதாசிவம் பேசிய போது தமது துணைவியின் புகழ் உலகின் மறு பாதியில் எப்படிப் பரவியிருக்கிறது என்பதில் அவர் அடைந்துள்ள பெருமிதமும், ஈடுபாட்டுடன் இசைக் கச்சேரிகளைக் கேட்ட அமெரிக்கரிடம் அவர் கொண்டுள்ள நன்றி உணர்வும் வெளிப்பட்டன. அற்புதமான விருந்தை ரசித்துப் பேசிய ஸ்ரீ சதாசிவம் தமது துணைவியாரை ஒரு பாடல் பாடுமாறு பணித்து முடித்தார். எம். எஸ்ஸும் ராதாவுமாக அவ்வாறே செய்து கூட்டத்தினரை மகிழ்வித்தனர்.

கிழக்கத்தியக் கலைகளுக்கான அமெரிக்க சங்கமும் (American Society for Eastern Arts) ஆசிய நிறுவனமும் (Asia Foundation) சேர்ந்து, ஸான்ஃபிரான்ஸிஸ்கோ கலைக் காட்சிசாலையில் உள்ள மகத்தான அரங்கத்தில் நவம்பர் நான்காந் தேதி எம். எஸ். கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தன. கான்ஸல் ஜெனரல் யூனஸ், ஸ்க்ரிப்ஸ் தம்பதியர், ஆசிய நிறுவனத் தலைவர் வாலஸ் தாம்ஸன், காட்சிசாலைத் தலைவர் மார்டிமர் ஃப்ளேஷ்ஹாக்கர், கிழக்கத்தியக் கலைச் சங்கத்தின் நிர்வாக இயக்குனர் ராபர்ட் ஸ்குட்ஸ் போன்ற கௌரவம் வாய்ந்த பெருமக்கள் பலர் அன்றையக் கச்சேரிக்கு விஜயம் செய்திருந்தனர்.

இரண்டாம் தேதியன்று ஸ்டான்ஃபோர்டில் எம். எஸ்ஸின் இசையைக் கேட்ட பலர், இரண்டு நாட்களுக்குப் பிறகு ஃபிரிஸ்கோவில் நடந்த இக்கச்சேரிக்கும் நண்பர்கள் மூலம் பிரவேசச் சீட்டு பெற்று, அங்கிருந்து வந்தனர். இதனால் அரங்கம் நிரம்பியிருந்தது மட்டுமின்றி, இரண்டு மணிகளுக்கும் அதிகமாகப் பலர் மண்டபத்தின் பின்புறத்திலும், பக்கங்களிலும் நின்று கொண்டே கச்சேரி கேட்க வேண்டியதாயிற்று. அன்றைய கச்சேரி 'ராமநன்னுப்ரோவரா'வில் தொடங்கி 'ஹரி துமஹரோ' முடிய அதி உன்னதமாக விளங்கியது. ரசிகர்களின் இடைவிடாத பாராட்டுக் கோஷத்தினிடையே எம். எஸ். இரண்டாம் முறை 'ஹரிதும ஹரோ' பாடினார்.

கச்சேரிக்குப்பின் எழிலார்ந்த ஒரு வரவேற்பு வைபவம் நிகழ்ந்தது. அப்போது சில வங்காளிகள் கேட்டுக் கொண்டபடி ரவீந்திர கீதமொன்றை எம். எஸ். பாடினார். அந்த ஐந்து நிமிட காலம், அனைவரின் உரையாடல்களும் அடங்கி இசை நாதம் மட்டுமே நிரம்பியிருந்தது.

ஸான்ஃபிரான்ஸிஸ்கோ அநுபவம் எனக்குத் தனிப்பட்ட ஆனந்தமாகும். ஏனெனில், என் குடும்பத்தினர் பலர் இங்கு வசிக்கிறார்கள். அவர்களில் பலர் கச்சேரிக்கும் வந்திருந்தனர். ''ஏமாற்றத்துடன் திரும்பவும் தயாராகத்தான் நாங்கள் வந்திருந்தோம். ஆனால் 'மாடம்' எம். எஸ். சுப்புலக்ஷ்மியால் கர்நாடக சங்கீதத்துக்கு 'மதமாற்றம்' செய்யப்பட்டே திரும்புகிறோம்'' என்று அவர்கள் என்னிடம் மனம் விட்டுச் சொன்னார்கள்.

நாங்கள் முன்பு புறப்பட்ட கிழக்கத்தியக் கடலோரத்தை அடையு முன்பு இன்னும் இரண்டு கச்சேரிகளே மீதமுள்ளன. இதற்காக இன்று கான்ஸாஸ் நகருக்கு வந்திருக்கிறோம். மெல்ல மெல்ல இந்த இன்பப் பயணம் முடிவுக்கு வருவதை எண்ணுகையிலேயே எனக்குத் துயரமாக இருக்கிறது. ஆயினும், இதில் எனக்கேற்பட்ட அநுபவங்களை நினைத்து ஆனந்தம் கொள்கிறேன். இன்னும் நான் கேட்க வேண்டிய கச்சேரிகள் ஆறு இருக்கையில், அதற்குள்ளாகவே நான் ஏன் பிரிவுத் துயரைப்பற்றி நினைக்கவேண்டும்?

## ஸ்டேட் பாங்க் மிகப் பெரிய சந்தைகளை உங்களுக்கெனத் திறந்துதவும்.

நீங்கள் ஒரு சிறு தொழிலதிபரா? உற்பத்தியை அதிகப்படுத்தவும்...பெருகி வளரவும்...உங்களுக்குள்ள சந்தைகளை விரிவுபடுத்தவும் உதவி தேவைப்படுகிறதா? வாருங்கள் ஸ்டேட் பாங்கிடம்.

நாடெங்கும் தங்களுக்குள்ள 2,000 அலுவலகங்கள் மூலம், ஸ்டேட் பாங்கும் அதன் துணைபாங்குகளும் சிறு தொழில்களுக்குக் கீழ்க்காணும் வசதிகளை வழங்குகின்றனர்:

கச்சாப் பொருள்களையும் பூர்த்தி பெற்ற சரக்குகளையும் பிணையமாகக் கொண்ட முன்பணக் கடன்கள்.

பாங்கிலே பூட்டி வைத்துக் கொள்ள முடியாத பிணையங்களாக இருக்குமிடத்திலே தொழிற்சாலைகளாகக் கடனுதவி.

பிணையங்கள் கிடைக்காத இடங்களிலே உத்தமமான கடன் வசதிகள்.

நவீனமயமாக்கல், விரிவுபடுத்தல் ஆகியவற்றுக்கான மத்திய தரக் காலக் கடன்கள்.

இயந்திரக் கருவிகளை வாங்குவதற்கான தவணைக் கடன்.

### சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

சிறுபான்மைத் தொழில்களுக்குப் பெரிய அளவில் உதவி

LRE Aiyars ...

# அமிர்தாஞ்சனம்

## தடவி விரைவில் நிவாரணம் பெறுங்கள்

உடலில் ஒரு பகுதியை மட்டும் பாதிக்கும் வலிக்காக உள்ளுக்கு மருந்து சாப்பிடுவானேன்? வலிக்கும் இடத்தின் மேல் மட்டும் அமிர்தாஞ்சனம் தடவி விரைவாக வலி நிவாரணம் அடையுங்கள். பத்து மருந்துகள் கொண்டு விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டுள்ள அமிர்தாஞ்சனம் சுளுக்கு, தலைவலி, தசைவலி மற்றும் மூட்டு வலிகளுக்கு சிறந்த வகையில் நல்ல நிவாரணமளிக்கும். மற்றும் மார்புச்சளி, ஜலதோஷம் போன்றவைகளுக்கும் ஏற்ற மருந்து அமிர்தாஞ்சனம். ஒரு சமயத்தில் தேவையானதெல்லாம் மிகச் சிறு அளவே; ஆதலால், ஒரு பாட்டில் உங்கள் குடும்பத்திற்கு மாதக்கணக்கில் வரும். • அமிர்தாஞ்சனம் 70 வருடங்களாகக் குடும்பங்களில் பயன்பட்டு வரும் கைகண்ட நிவாரணி.

பத்து மருந்துப் பொருள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற சிறந்த நிவாரணி.

**சுளுக்கு**

எவ்வளவு அசௌகரியமாக இருப்பினும் உபாதை **வலிக்கும் பகுதியில்** மட்டுமே




அமிர்தாஞ்சன் லிமிடெட், மதராஸ்
பம்பாய் · கல்கத்தா · டெல்லி

# பெண்குலத்தின் பேரொளி

வசுமதி ராமசாமி

**1872**ம் ஆண்டில் ஒரு நாள் அமெரிக்காவில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. அன்று ஸ்யூஸன் ஆன்ட்டனி, 'வந்தது வரட்டும்! ஓட்டுச் சாவடிக்குப் போயே ஆக வேண்டும்! ஒரு சில பெண்களேனும் வோட்டுப் போட்டே தீர வேண்டும்!' என்ற ஒரு முடிவுக்கு வந்து விட்டாள். ஸ்யூஸனும் அவளுடன் பதினாறு பெண்களும் வோட்டுச் சாவடிக்குப் போனார்கள். தங்களை ஒருவராலும் தடுக்க முடியாது என்று கூறிக் கொண்டே வோட்டுப் போட்டு விட்டும் வந்து விட்டார்கள்! சில வாரங்கள் கழித்து நியாய விரோதமாக வோட்டளித்த குற்றத்துக்காக ஸ்யூஸனைக் கைது செய்தார்கள்! அவளும் அதைத்தான் ஆவலுடன் எதிர் பார்த்திருந்தாள்! குற்றவாளி என்று தீர்ப்புக் கூறி நூறு டாலர் அபராதமும் விதித்தார்கள். ஸ்யூஸன் அபராதத் தொகையைச் செலுத்த இறுதி வரை மறுத்து விட்டாள்! நீதிபதி, தாம் அவளைத் தண்டித்து விட்டால் அது மற்றவர்களுக்கும் எச்சரிக்கையாக இருக்கும் என்று எண்ணினார். ஆனால் அபராதத்தைச் செலுத்த மறுத்த அவளைச் சிறைக்கு அனுப்பும் அளவுக்கு அவருக்குத் தைரியம் வரவில்லை! *

பெண்கள் வோட்டுரிமை, கல்வி உரிமை போன்றவற்றுக்காக நம் நாட்டில் மட்டுமல்ல, அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் உலகின் வேறு பல பாகங்களிலும் தீரமிக்க மாதர்கள் பலர் மகத்தான கஷ்டநஷ்டங்களுக்கு உள்ளாகித் தியாகச் சுடர்களாக ஜொலித்திருக்கிறார்கள்.

''நீங்கள் ஏதாவது ஒரு லட்சியத்தைக் கருத்தில் கொண்டிருந்தீர்களானால், எந்த இடையூறும் எத்தனை பெரிய சிரமங்களும் உங்கள் போக்கைத் திருப்ப இடமே கொடுக்காதீர்கள்! வேறு எவரும் செல்லத் துணியாத இடத்துக்கு நீங்கள் செல்லுங்கள். வேறு எவரும் செய்யத் துணியாத செயலை நீங்கள் துணிந்து செய்யுங்கள்!'' * என்று பெண் கல்விக்காக அரும்பாடுபட்ட மேரி லையன், அமெரிக்க மாதர்களுக்கு அறைகூவல் விடுத்தாள்.

இந்தப் பரம்பரையில் உதித்த — தமிழ் நாட்டு மாதர் குலத் திலகம் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி. அடுத்த பக்கத்திலே பிஞ்சு உள்ளங்களுக்கு மத்தியில் காணப்படும் பழுத்த தோற்றத்தைப் பாருங்கள்! அந்த முகத்தில் எத்தனை உறுதி; அதே சமயத்தில் எத்துணை கருணை!

''எங்க 'ஔவை இல்லத்திலே' தினமும் அநாதைக் குழந்தைகள் வந்து சேர்ந்து கொண்டே இருக்கிறாங்க. இன்னிக்குப் பாருங்க. பத்து நாளையக் குழந்தை ஒண்ணு வந்திருக்கு. பெத்தவங்க பொறுப்பில்லாம இப்படிக் குழந்தையை விட்டுடறாங்க. ஏம்மா, நீ நல்ல பொண்ணா இருக்கியே. அந்தக் குழந்தைக்கு ஒரு தொட்டில் வாங்கிக் கொடும்மா! நேத்திக்குப் பாருங்க, ஏழு வயசுப் பொண் குழந்தை; அதுக்குத் தாய் இல்லையாம். தகப்பன் இரண்டாவது கல்யாணம் செய்துண்டு, அந்தப் பெண்ணை இங்கே விட்டுட்டான்....''

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு இப்படி என்னிடம் பேசிக் கொண்டு போன டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி அம்மையார் அவர்களை நினைக்கும் பொழுது, அவருடைய வாழ் நாட்களிலே சாதித்த சாதனைகளையெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக எண்ணும் போது, மனம் நெகிழ்ந்து, கைகுவித்து அஞ்சலி செய்யத் தோன்றுகிறது.

ஆழ்கடலிலே திமிங்கிலமும், சுறா மீனும் இருக்கின்றன. ஆனால் அபூர்வமாக, விலை உயர்ந்த நல்முத்தும் நமக்குக் கிடைக்கிறது. கடலைக் கடையும் பொழுது ஆலகால விஷமும் தோன்றியது. ஆனால் லக்ஷ்மிதேவியும் தோன்றினாள். பாற்கடலிலே நமக்குக் கிடைத்த நிதி முத்துலக்ஷ்மி அம்மையார்.

எண்பது ஆண்டுகளுக்கு முன்னால் புதுக்கோட்டை சமஸ்தானத்தில் பிறந்தார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி அவர்கள். தந்தையின் பரந்த நோக்கத்தினாலும், தம்முடைய புத்திசாலித்தனத்தினாலும் படித்து டாக்டர் பட்டம் பெற்றார். அந்தக் காலத்திலே வைத்தியத் தொழிலில் பெண்கள் மிகவும் குறைவாக இருந்ததினால், டாக்டர் அம்மா அவர்களுக்கு நல்ல வருமானமும், ஆதரவும் இருந்தது. அவர்கள் தொழிலிலே மேலும் மேலும் பொருளும், பெருமையும் பெற்று வாழ்ந்திருக்கலாம். ஆனால் அம்மா அவர்கள் தம்முடைய சுயநலத்தையே மறந்து, பொது வாழ்க்கையிலே தீவிரமாக ஈடுபட்டார். டாக்டர் அம்மா அவர்களின் பெரும் பாக்கியத்தால் அவர்களுடைய சேவைக்குப் பெரும் ஆதரவு கொடுக்கும் வகையில், அன்பே உருவான டாக்டர் சுந்தர ரெட்டி அவர்கள் கணவராக வாய்த்தார். சமூகத்தில் பெண்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகளைத் தகர்த்தெறியப் பாடுபட்டார். அந்த அறப் போரிலே அவருக்கு நேர்ந்த இடையூறுகளும், துன்பங்களும் கற்பனைக்குக்கூட எட்டாதவை!

பெஸண்ட் அம்மை, கஸின்ஸ் அம்மை இவர்களுடைய தொடர்பு டாக்டர் முத்துலக்ஷ்மி அவர்களுக்கு ஏற்பட்டது. அவர்களுடன் இணை சேர்ந்து விபசார ஒழிப்பு, தேவதாஸி என்ற இழிவான வழக்கம் முதலியவைகளைத் தவிர்க்கப் போராடினார். இதன் விளைவாக, சட்ட பூர்வமாக இவை தடுக்கப்பட்டன.

1926ம் ஆண்டிலிருந்து 30ம் ஆண்டு வரை சென்னை சட்ட சபையில் உதவி சபாநாயகராக, முதன் முதலில் ஒரு பெண்மணி தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த ஆண்டுகளில் மிகத் திறமையுடனும், கௌரவத்துடனும் அந்தப் பதவியை வகித்தார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி. அதனால் மேற்சொன்ன

* சுதந்திரத் தியாகிகள் என்ற நூலிலிருந்து. தமிழில் பெ. நா. அப்புஸ்வாமி, பிரசுரம்: ஜோதி நிலையம், சென்னை-18.

முக்கிய சட்டங்களை அமுலுக்குக் கொண்டு வருவது சாத்தியமாயிற்று. அந்தச் சமயம் காந்திஜியைக் கைது செய்தபொழுது, அதைக் கண்டனம் செய்யும்வகையில் டாக்டர் அம்மா அவர்கள் உதவி சபாநாயகர் பதவியை ராஜிநாமாச் செய்தார். பெண்களில் வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை வேண்டும் என்ற இயக்கத்துக்கு முன் நின்று, வாதாடி வெற்றி பெற்ருர். ஒத்துழையாமை இயக்கத்திலும் கலந்து கொண்டார்.

1917ம் ஆண்டிலிருந்து இந்திய மாதர் சங்கத்தின் பொறுப்புள்ள அங்கத்தினராகவும், பின்னர் தலைவியாகவும் இருந்து ஆக்க வேலைகளை நிறைவேற்றுவதற்காகவும் சட்டங்கள் மூலமாகப் பெண்களுக்கு வேண்டிய உரிமை, பெருமைகளைப் பெறுவதற்காகவும் பாடுபட்டிருக்கிருர். பெண்களின் அவலநிலையைக் கண்டு மனம் வெதும்பி என்றும் சோர்ந்து போனதில்லை இவர். மாருக, சிறுமை கண்டு சீறி எழுந்து, இந்திய மாதர் சங்கத்தின் மூலமாகவோ தனிப்பட்ட முறையிலோ கூட்டங்களைக் கூட்டி, தீர்மானங்களைக் கொண்டு வந்து, சட்டசபைக்குத் தபால் எழுதி, தந்தி அடித்து ரகளை செய்து விடுவார். அப்படி இவர் அமுலுக்குக் கொண்டு வர உதவிய சட்டங்களில் முக்கியமானவை பால்ய விவாகத் தடுப்பு, பலதார விவாகத் தடை, பெண்களுக்குச் சொத்துரிமை ஆகியவையாகும்.

சுதந்திர இந்தியாவிலே பெண்களுக்குச் சட்டசபையில் இடம் வேண்டும், ஒவ்வொரு குழுவிலும் பெண்களுக்கு ஸ்தானம் வேண்டும், பெண்கள் எல்லாவிதத்திலும் உயர்ந்தவர்களாக இருக்க வேண்டும், சமூகம் பெண்களைக் கௌரவிக்க வேண்டும் என்ற தீவிர எண்ணம் கொண்டு இன்றைக்கும் எச்சரிக்கையுடனேதான் இருக்கிருர் என்று நினைக்கும் பொழுது நமக்குப் பெருமிதம் ஏற்படுகிறது.

இந்திய மாதர் சங்கத்தின் ஆதரவில் நடைபெறும் நிர்மாண வேலைகள், ஆக்க வேலைகள் எல்லாம் டாக்டர் அம்மா அவர்கள் தலைமையில்தான் நடைபெறுகின்றன. ஏழைக் குழந்தைகளுக்குப் பால் வினியோகம், ஏழைகளுக்கு இலவச வைத்தியம், அன்னதானம், முதியோர் கல்வி இப்படிப் பல நல்ல காரியங்கள் நடக்கின்றன. அச்சகமும் காகித உறைகள் செய்யும் தொழிலும் இன்னும் பெண்களுடைய நலனுக்காக அநேக பணிகளும் நடைபெறுகின்றன.

அடையாறு வஸந்த சாலையில் 1930ம் ஆண்டு அநாதைப் பெண்களுக்கென ஓர் இல்லம் ஏற்படுத்தினர். பெண்கள் எஸ்.எஸ்.எல்.ஸி. வரை படித்து, பலவிதப் பயிற்சிகளைப் பெற்று, அறிவு நிறைந்தவர்களாக, தன்னம்பிக்கையுடன் வாழ வழி வகுத்துக் கொடுக்கிறது 'ஔவை இல்லம்'. அநாதைக் குழந்தைகள் ஆண்டுதோறும் 'ஔவை இல்ல'த்தில் புகலிடம் பெறுகின்றன. டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி அம்மையாரின் பெருமுயற்சியால் அடையாறில் புற்றுநோய் நிவாரண வைத்தியசாலை ஒன்று நிறுவப்பட்டு அது பெரிய அளவில் வளர்ந்திருக்கிறது. பாரீஸில் நடந்த அகில உலகப் பெண்கள் ஒருமைப்பாடு மகாநாட்டுக்கும், 1933ம் ஆண்டு சிகாகோவில் நடந்த மாதர் மகாநாட்டுக்கும் இந்தியப் பிரதிநிதியாகச் சென்றிருந்தார் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி. 1956ம் ஆண்டு அம்மையார் அவர்களுடைய சிறந்த பணிகளைப் பாராட்டி, ராஷ்டிரபதி அவர்கள் 'பத்மபூஷண்' என்ற பட்டத்தை அளித்தார்.

இந்த நவம்பர் மாதம் கடைசி வாரத்தில் பத்மபூஷண் முத்துலக்ஷ்மி ரெட்டி அம்மையார் அவர்களுடைய சதாபிஷேக வைபவத்தைக் கொண்டாட இந்திய மாதர் சங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. ஒரு நல்ல சந்தர்ப்பத்திலே ஒரு நல்ல காரியத்தைத் தொடங்குவது மிகச் சிறப்பாக முடியும் என்ற கருத்துக்கிணங்க, இந்திய மாதர் சங்கத்தின் அலுவல்களை நிறைவேற்றுவதற்கு ஒரு கட்டடம் எழுப்ப நிதி ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

பெண்களுக்குச் சம உரிமை என்பது இப்போது நமக்குச் சகஜமாகிவிட்ட விஷயமாக இருக்கிறது. இதில் வியப்பதற்கே ஒன்றுமில்லை என்று கூட எண்ணத் தோன்றுகிறது. ஆனல் இந்தக் கௌரவமான நிலையை இன்று மாதர்கள் அடைய அந்த நாளில் எவ்வளவு தீரத்துடனும் தியாக உணர்ச்சியுடனும் போராடினர்கள் என்பதை டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டி போன்றோரின் வாழ்க்கையை ஊன்றி ஆராய்ந்து பார்த்தால்தான் புரியும். அப்படிப் பார்க்க வேண்டியது நவ பாரதத்தில் வாழும் ஒவ்வொரு யுவதியின் கடமையுமாகும்.





# வெண்ணிலவுப் பெண்ணரசி

## சோமு

### அத்தியாயம் 9

### உறுதிமொழி

“ ‘இந்த வணிகர்களுடைய பொற்காசுகளை யெல்லாம் சரியாக எண்ணிப் பார்த்து வாங்கிக் கொண்டு, இவர்களை இன்னொரு மரக்கலத்தில் ஏற்றி இப்போதே வழியனுப்புங்கள்! அதோ நிற்கும் அந்தப் பெண்மணியையும் அவளுடைய குழந்தையையும் நம்முடைய அரச மரக்கலத்தில் ஏற்றி வெள்ளைத் தீவுக்குக் கொண்டு செல்லுங்கள்!’

''இவ்வாறு கட்டளையிட்டான் வான மண்டலக் கடம்பன், தன்னுடைய வீரர்களைப் பார்த்து !

''அவ்வளவுதான்! அந்தக் கட்டளை பிறந்த மறு விநாடியே வெள்ளைத் தீவின் வீரர்கள் தங்கள் கொள்ளை யரசனின் சொல்லைச் செயலிலே நிறைவேற்றத் தொடங்கினார்கள். நானும் மணிமாலையும் இந்த வெள்ளைத் தீவுக்கு வந்து சேர்ந்தோம்! அந்த நாளிலிருந்து நான் இந்தக் கொள்ளைக் கூட்டத்தாரின் இளவரசியாக வளர்ந்து வருகிறேன்! அன்பரே, கன்னி மாடத்தின் கதவுகளுக்குள்ளே மணிமாலையும்நானும் தங்கக் கூண்டிலே வளரும் எங்கள் புன்னாட்டுப் பறவைகளைப் போலச் சிறை வாழ்வு வாழ்கிறோம்.''

இவ்வாறு சொல்லி நிறுத்தினாள் நீலவல்லி. இது வரை அவளுடைய துயரக் கதையைக் கேட்டுக் கொண்டு வந்த வேலவன் கோதை, இப்போது எதுவும் பேச முடியாத நிலையில், அந்தப் பாறைகளிலும் மணற்பரப்பிலும் மோனமாக மெல்ல நடந்தான். அவனுடைய இதயத்தின் ஆழத்திலே ஏதேதோ உணர்ச்சிகள் கொந்தளிப்பது முகத்திலே தெரிந்தது. ஆழமான கடலின் கொந்தளிப்பு அலைகளாகக் கிளம்பிக் கரையிலே வந்து சரிவது போல, அவனுடைய உள்ளத்தின் வேதனையெல்லாம் முகத்திலே வந்து சரிந்தது. அவனுடைய கண்கள் கலங்கின. சொன்னான்:

''வல்லி! ஒரு கேள்வி உன்னைக் கேட்கிறேன், அது சிறுபிள்ளைத்தன



;த் தோன்றினாலும் தோன்
ரம். ஆனாலும் அந்தச்
ந்தியை அறிந்து கொள்ள
ப்யாகவே ஆசைப்படு
றன் நான்!''
'அப்படி என்ன செய்தி
வரை நான் சொல்லாது,
ரிமேல் நீங்கள் கேட்டுத் தெரிந்து
ாள்ள வேண்டியிருக்கிறது?''
'உனக்கு நீலவல்லி என்று பெயர்
டியது யார் அம்மா? அதை எண்
ப் பார்க்கப் பார்க்க ஏதேதோ
ான்றுகிறது எனக்கு! நம்முடைய
பர்களிலுங்கூட ஊழ்வினை தனது
பப் பின்னலை நெய்கிறது போலும்!''
'மணிமாலையும் என் தாயும் சேர்ந்து
படி ஒரு பெயரைச் சூட்டியிருக்க
ண்டும் என்று நினைக்கிறேன். ஏன்,
ரென்று இப்போது என் பெயரை
ாயத் தொடங்கி விட்டீர்கள்?''
'இல்லை. நீ பிறந்து வளர்ந்த
தக்கும் உன்னுடைய பெயருக்கும்
ள ஒரு நெருங்கிய தொடர்பை
ணிப் பார்த்தேன். துயரமும்
ப்புமாகவே இருக்கிறது. உன்
ய் வழியிலோ என்றால் நீலநதியின்
ாகிய எகிப்து நாட்டு மகள்
தந்தையின் வழியிலோ என்றால்
க் கல் சுரங்கத்தின் நாடாகிய புன்
ட்டு மகள் நீ! இரண்டு வகையிலே
ர்த்தாலும் நீல மகளான நீல
லிதான் நீ! ஆனால் இப்போது நீல
யும் நீலக் கல்சுரங்கமும் உன்னைப்
ந்து போய் எங்கோ இருக்கின்றன!
பற்றோடு உனக்குள்ள தொடர்பு
ன என்பதைக்கூட ஒரு மணிமாலை
ன் உனக்கு எடுத்துச் சொல்லி
ாக்க வேண்டிய நிலை வந்தது! அது
் ஒரு நீலப் பொட்டு உன்னுடைய
ற்றியிலே இருந்த காரணத்தினால்!
துவும் இல்லை என்றால் உனக்கே

உன்னைப் பற்றி ஒன்றும் தெரியாத முறையில் நீ இந்த வினாடி வரை இருந்திருப்பாய்! அப்படித்தானே?''

''அன்பரே, நீங்கள் சொல்வதில் ஓரளவு உண்மை இருக்கிறது. என்றாலும் மணிமாலையின் உள்ளக் கருத்து உங்களுக்குத் தெரியாததாகையால் இவ்வாறு கூறுகிறீர்கள். அவளுடைய உள்ளத்தின் ஆழத்திலே நீண்ட நாளாகவே ஒரு பெரிய ஆசை சிறையிருந்து வருகிறது. அதை அவளே என்னிடம் பல முறை சொல்லியிருக்கிறாள். எங்கோ எப்படியோ இருக்க வேண்டிய ஓர் அரச குமாரி இந்தக் கண்ணற்ற தீவிலே வந்து கொள்ளைக் கூட்டத்தாரின் மகள் என்று உலகம் பழிக்கிற முறையில் வாழ்வது அவளுக்குத் தாங்கமுடியவில்லையாம். அவளிடம் ' எத்தனையோ நம்பிக்கை கொண்டு என்னை ஒப்படைத்துப் புன்னாட்டுக்கு அனுப்பி வைத்தார் அல்லவா என் தாய் மாமன் இளங் கிளாடியஸ்! அந்த நம்பிக்கைக்கு உகந்த முறையில் என்னைப் புன்னாட்டில் கொண்டு போய் என் தந்தையிடம் ஒப்படைக்க முடியாமல் போய் விட்டதே என்பதில் அவளுக்கு எல்லையற்ற ஏக்கம்! என் தந்தை உயிரோடு இருக்கும் வரை இதையே அவள் எண்ணி எண்ணி ஏங்கி வந்தாளாம். எப்படியாவது என்றாவது ஒரு நாள் என்னை என் தந்தையிடம் கொண்டு ஒப்படைத்தால் ஒழிய அவளுடைய உள்ளம் அமைதி பெறாது என்றும், அப்படி ஒப்படைக்க முடியாமல் அவள் மடிந்து விட்டால் அவளுடைய உயிர் அமைதியற்ற நிலையில் இந்த வெள்ளைத் தீவையே சுற்றித் திரியும் என்றும் அவள் என்னிடமே ஒரு நாள் சொன்னாள். ஆனால் அந்த எண்ணம் ஈடேற முடியாமல என் தந்தையின் முடிவு நிகழ்ந்தது. இப்போது என் தம்பி — புனல்வேணியரின் பட்டத்தரசி பெற்ற இளவரசர் — புன்னாட்டின் அரசராக முடிசூடியிருக்கிறார். இப்போதும் மணிமாலை என்ன சொல்லுகிறாள் தெரியுமா ? என்றாவது ஒரு நாள் என் தம்பியைப் பார்த்து அவரிடம் எல்லாச் செய்திகளையும் கூறி என்னை அந்தக் குடும்பத்திலே ஒப்படைத்து விட்டுத் தான் எங்காவது சாக்கியப் பள்ளியிலே போய்ச் சேர்ந்து நல்ல கதிக்கு வழி தேடப் போகிறாளாம்! வான மண்டலக் கடம்பனுடைய செயல் அவ்வளவு தூரம் அவளுடைய இதயத்தைத் தாக்கியிருக்கிறது!''

இவ்வாறு சொல்லும் போது நீலவல்லியின் குரலில் இழைந்த துயரத்தையும், மணிமாலையிடம் அவளுக்கு இருந்த எல்லையற்ற பரிவு அந்தத் துயரத்திலே விம்மி நிற்பதையும், கூர்ந்து கண்டான் வேலவன் கோதை. கேட்டான்:

''நீலவல்லி! இத்தனை நல்ல உள்ளங்களின் ஏக்கத்தையும் சேர்த்துப் பழி சுமக்கிறாரே, உங்கள் கடம்ப மன்னர், இது எதற்காக என்றுதான் எனக்குப் புரியவில்லை. யவன மரக்கலங்களிலே வணிகர்களின் பொற்காசுகளையும் விலையுயர்ந்த பொருள்களையும் அவர் கொள்ளையடிப்பதிலே பொருள் உண்டு. ஆனால் உன்னையும் மணிமாலையையும் அவர் ஏன் இந்த வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வர வேண்டும்? எதற்காக உன்னை அவர் தமது மகளைப் போலவே கருதி வளர்க்க வேண்டும்? இதுதான் எனக்குப் புரியவில்லை!''

இருவரும் மேலே நடந்தார்கள். நீலவல்லியின் முகத்தில் வேலவனுடைய இந்தக் கேள்விகள் பெருங் குழப்பத்தை உண்டாக்கின என்பது வேலவனுக்கே நன்றாகத் தெரிந்தது. அப்போது நீலவல்லி சொல்லுவாள்:

''என்னுடைய வாழ்வில் இன்னும் என்னால் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கும் ஒரு புதிர் இதுதான்! இதில் இன்னும் ஒரு வியப்பு என்னவென்றால் மணிமாலையும் நானும் கடந்த சில ஆண்டுகளாக வானமண்டலக் கடம்பரிடம் மனம் விட்டுப் பேசுவதில்லை என்பதும், ஏதோ ஓர் அருவருப்பு அவரிடம் எங்கள் இருவருக்குமே ஏற்பட்டிருக்கிறது என்பதும், அவருக்கே ஓரளவு உணிக்க முடிகிறது. பல வேளைகளில் அவர் ஏதோ சொல்ல முனைந்து, பிறகு அந்த எண்ணத்தைப் பேச முடியாமல் மறைத்துக் கொள்கிறார். மணி மாலைக்குமே இது ஒரு பெரிய புதிராகத்தான் இருக்கிறது. கடம்ப மன்னர் தமது வாழ்வில் திருமணமே செய்து கொள்ளாமல் இருப்பதும், எத்தனையோ பல தீவினைகள் செய்கிறவர் பெண்களோடு நடந்து கொள்ள வேண்டிய ஒழுக்கத்தில் மட்டும் சற்றும் பிசகாமல் தூய வாழ்க்கை வாழ்வதும், மணிமாலைக்கு மாபெரும் அதிசயமாக இருக்கிறது! கொள்ளையடிக்கிறார். துறவிகளையெல்லாம் கேடுறுத்தி நாடு கடத்திப் பழி பாவங்கள் செய்கிறார். அளவுக்கு மீறிக் குடிக்கிறார். என்றாலும் பெண்களோடு கொள்கிற உறவில் மட்டும் இம்மியளவுகூடத் தவறுதல் இன்றி நடந்து கொள்கிறார். சில நாட்களில் நாங்கள் அவரை மதியாமல் இருப்

# எல்.ஐ.சி. வேலை நாள் தோறும் 2,000,000 ரூபாயை உரிமைத் தொகைகளாகச் செலுத்துகின்றது!

மனமகிழ்வூட்டும் தொகையிது! இதைவிட முக்கியமானது எது தெரியுமா? மக்களின் கனவு நனவாக—களிப்பு மிக—இத்தொகை வழி வகை செய்வதுதான்.



உதாரணமாக, மேனன் அவர்கள் ஓய்வுக் காலத்தில் நிம்மதியுடன் வாழ வழி வகுக்கிறது.



ரேகே: இவர் கனவில் உருவாகிய வீடு நனவாகக் காட்சியளிக்கிறது.



பரிதா: கைம்மை நிலையடைந்து தனித்து வாழும் இவருக்கு வாழ்நாள் முழுதும் வருவாய் நல்க வகை செய்கிறது.



டேரெக்: பள்ளி இறுதித் தேர்வுக்குச் சிரமப்பட்டுப் படிக்கும் இவன் பொறியியல் நிபுணராக விரும்புகிறான். இவன் எண்ணம் நிச்சயம் நிறைவேற சந்தர்ப்பம் கிடைக்கிறது.



அபர்ணா: முறுவல் பூத்திருக்கும் இந்த முகமலர், இவளுடைய திருமணம் அண்மையில் நிகழவிருக்கிறது என்பதைத்தான் சொல்லாமல் சொல்கிறது.

நாள் ஒன்றுக்கு ரூ 20 இலட்சம்—ஆண்டொன்றிற்கு ரூ68·57 கோடிக்கு மேல் உரிமைத் தொகைகளாகச் செலுத்தப்படுகின்றன. இன்ஷ்யூர் செய்து கொள்ளும் மக்களின் எண்ணிக்கை பெருகப் பெருக இத்தொகையும் பெருகிக் கொண்டே போகும். இது பணத்தைப் பொறுத்த விஷயம் மட்டுமல்ல; வருங்காலத்தைப் பற்றிய நம்பிக்கையும் மலர்ந்து மணம் வீச—



**ஆயுள் இன்சூரன்சு போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.**

ASP/LIC-2 44

பது வெளிப்படையாகத் தெரிந்த போதும்கூட, எங்களை அவர் கடிந்து கொள்ளவோ வேதனை தரும்படி பேசவோ முனையவில்லை. இதெல்லாம் எனக்கும் மணிமாலைக்கும் பெரும் புதிராக இருக்கிறது. எதற்காக எங்கள் இருவரையும் யவன மரக்கலத்திலிருந்து இந்த வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வந்தார் என்பதும், எதற்காக எங்களைக் கன்னிமாடத்திலே சிறை வைத்து என்னை ஓர் இளவரசி போல எல்லாச் சிறப்புகளும் வழங்கி வளர்த்து வருகிறார் என்பதும், இந்த வினாடி வரை எனக்குப் புரியவில்லை! சில வேளைகளில் வான மண்டலக் கடம்பரிடம் எனக்கு ஒரு வகையான இரக்கம், பரிவு, உண்டாகிறது. சில வேளைகளில் ஓரளவு நன்றியுணர்ச்சிகூட எனக்கு ஏற்படுகிறது. அப்போதெல்லாம் அவருடைய தீவினைகளையும், வாழ்விலே அவர் செய்துள்ள பழி பாவங்களையும் நினைத்துப் பார்த்து, அந்த இரக்கத்தையும் அந்தப் பரிவையும் அழுத்தி அமுக்க முயல்கிறேன்! நீங்களே சொல்லுங்கள், இவரிடம் என்னை என் பெற்றோர்கள் ஒப்படைத்தார்களா? இவரிடம் வந்து நான் அடைக்கலம் புகுந்தேனா? கடல் கடந்த நாட்டிலே எதிர்பாராத வகையில் மடிந்துவிட்ட என் அருமை அன்னை என் ஆசைத் தந்தையிடம் என்னைச் சேர்க்க வேண்டும் என்று அல்லவா விரும்பினாள்! எத்தனை ஆசைக் கனவுகளோடு தன்னுடைய உடன்பிறந்தாளின் ஆசையை நிறைவேற்ற முனைந்தார் என் தாய் மாமன்! அத்தனை கனவுகளையும், அத்தனை எண்ணங்களையும், ஆசைகளையும் பாழடித்து விட்டாரே இந்தக் கடம்ப மன்னர்! இவரிடம் நான் பரிவு கொள்ளலாமா? இவரிடம் நான் இரக்கப்படலாமா? என் அன்னைக்கும் என் தந்தைக்கும் நான் எத்தனை பெரிய அநீதி செய்கிறேன்! இது எத்தகைய பாவம்! எவ்வளவு பெரிய தீவினை இது!''

நீலவல்லியினால் மணற் பரப்பிலே நடந்து செல்ல முடியவில்லை. அவளுடைய உடம்பு பதறிற்று. அவளுடைய கைகளும் கால்களும் ஆடின. உதடு படபடத்தது. அப்படியே அந்த மணற்பரப்பிலே நின்ற ஒரு பெரிய பாறைக்கு அருகிலே வந்து தயங்கினாள். சிதறின மன உணர்ச்சிகளையெல்லாம் உள்ளங் கையினால் பொத்திப் பிடிப்பது போலத் தன் நெஞ்சகத்தை வலது கையினால் தாங்கிக் கொண்டாள். பிறகு சொன்னாள்:




(அமெரிக்காவில் உள்ளவை)

காரோட்டிகளுக்கு: கவனமாக ஓட்டவும். இங்கு சுற்றுப்புறத்தில் ஐம்பது மைலுக்கு ஓர் ஆஸ்பத்திரியும் இல்லை!

பாதசாரிகளுக்கு: ஆம்புலன்ஸ் வண்டிக்காகக் காத்திருப்பதை விடப் பச்சை விளக்குக்காகக் காத்து நிற்பது மேல் அல்லவா?

ஆதாரம்: 'ஸன்ஷைன்'
தகவல்: ஏ. கே. கந்தசாமி

''அன்பரே, இத்தனை குழப்பங்களுக்கும், இத்தனை துயரங்களுக்கும் ஒரு விடை கண்டாக வேண்டும். எந்த நல்லோரையிலே நான் மீண்டும் புன்னாட்டின் புண்ணிய நிலத்திலே மிதிக்கப் போகிறேனோ, அந்த வேளையிலேதான் எகிப்திலே, ஏரிக்கரைக் கல்லறையிலே, துயில்கிற என் அன்னையின் இன்னுயிர் அமைதி கொள்ளும். அது வரை அந்த நல்லுயிருக்கு நிம்மதியே இராது! அப்படி நடவாமல் நான் இன்னும் இந்த வெள்ளைத் தீவிலேயே வாழ்ந்து தெளிவற்ற இரக்கத்துக்கும், பொருளற்ற பரிவுக்கும் என் உள்ளத்தில் இடம் கொடுத்து, எனது நோக்கங்களை மறந்து உயிர் வாழ்ந்தேன் என்றால், என் நரம்புகளிலே ஓடுகிற புன்னாட்டின் அரச உதிரம் கொதித்து வெடிக்கும் ஒரு நாள்! அப்போது நானும் இந்தப் பழி பாவம் நிறைந்த வெள்ளைத் தீவிலே பழி நிறைந்த மரணத்துக்கு உள்ளாகி, ஒரு பூதமாக, ஒரு பேயாக, ஒரு நீலப் பிசாசாக அலைந்து திரிவேன். பிறகு, பிறகு, பிறகு —''

நீலவல்லி அந்தப் பாறையிலே வந்து அப்படியே நின்று விட்டாள்! அவளுக்கு அதற்கு மேல் பேச முடியவில்லை. வேலவன் கோதை அவளுடைய அருகிலே வந்து நின்று அந்தத் துயரம் நிறைந்த முகத்தை, குழம்பிக் குமைகிற முகத்தை உற்றுப் பார்த்தான். அவனுக்குமே உடம்பு பதறியது.

வெள்ளைத் தீவின் கரையிலே வந்து விழுந்து புரண்ட நீல அலைகள் ஓய்வு ஒழிவின்றிக் கூவிக் கதறின. காற்று



''தேர்தல்லே நிக்கறதுக்கும், பஸ்ஸிலே நிக்கறதுக்கும், என்னடா வித்தியாசம்?''

''பஸ்ஸிலே நின்ன பிறகு தான் டிக்கட் கிடைக்கும், தேர்தல்லே டிக்கட் கிடைத்த பிறகு தான் நிற்கலாம்!''

'ஓ' என்று ஓலமிட்டு மரங்களினூடு சாடிப் பறந்தது. எங்கோ ஒரு மரக் கிளையிலிருந்து காட்டுப் பறவை ஒன்று ஏக்கக் குரலிலே அலறியது.

வேலவன் கோதை ஒரு விநாடி உள்ளத்தின் விளிம்புகளை நாயகப்படுத்திக் கொண்டு நின்றான். பிறகு பேசினான் :

''வல்லி! உண்மை. நீ சொல்வது முற்றிலும் உண்மை. இந்த வெள்ளைத் தீவில் இனியும் நீ இப்படியே இத்தனை குழப்பங்களுக்குள்ளும் வாழ்ந்தால்,— உன் உள்ளமும் உடம்பும் பெருங் கேட்டுக்கு உள்ளாகும். அதை நன்றாக உணர்கிறேன் நான். ஆனால் இனி உன் துயரங்கள் நீடிப்பதற்கு எவ்வித அவசியமும் இல்லையே! என்னை இந்தக் கருநீலக் கடல் இந்த வெள்ளைத் தீவின் கரையிலே கொண்டு சேர்த்த வேளை விடியற்காலை வேளையல்லவா? எந்த இருளுக்கும், எந்தப் புயலுக்கும் ஒரு விடிவு உண்டு என்பது உலக நியதியல்லவா! அதை நீ மறந்து விடலாமா?''

நீலவல்லி ஏதும் மறுமொழி பேசவில்லை. பாறையிலிருந்து மறுபடியும் சித்தத்தை உறுதிப்படுத்திக்கொண்டவளாக அவள் நகர்ந்தான். திரும்பி நடக்க ஆரம்பித்தான். சுனையும், சோலையும், சமணமுழையுமாக இருந்த அந்த அடர்த்தியான பொழிலுக்குள் இருவரும் மறுபடியும் நுழைந்தார்கள். அப்போது நீலவல்லி கேட்டான்:

''அன்பரே, நீங்கள் இந்தத் தீவுக்கு வந்த நோக்கம் கடம்பர்களை வேவு காண்பதற்காக! இப்போதோ நான் ஒருத்தி எதிர்பாராத விதமாக உங்களுடைய வேவுப் பாதையிலே குறுக்கிட்டு விட்டேன்! என்னுடைய துயரங்களையெல்லாம் கேட்ட பிறகும்கூட உங்களுடைய மனநிலையில் குழப்பமோ சிக்கலோ உண்டாகவில்லையா? அதை மட்டும் எனக்குத் தெளிவாகச் சொல்லுங்கள். ஏனென்றால் இது வரை என் வாழ்நாளில் நான் யார் யாரையெல்லாம் அணுகினேனோ அங்கெல்லாம் குழப்பமும் சிக்கலும்தான் ஏற்பட்டனவே தவிர, எத்தகைய தெளிவும் பிறக்கவில்லை! உங்களுடைய முயற்சிகளிலும் நான் ஒருத்தி புகுந்து கெடுவிளைவிக்க விரும்பவில்லை!''

இப்படி நீலவல்லி கூறியதும் 'பளீர்' என்று மறுமொழி சொன்னான் வேலவன் கோதை :

''வல்லி! நீ நினைப்பது போல மனக் குழப்பமோ அல்லது சிக்கலோ இப்பொழுது ஏற்பட்டிருப்பதாகவோ, அல்லது இனிமேல் ஏற்படப் போவதாகவோ நான் எள்ளளவும் நினைக்கவில்லை. உண்மையை மனம் திறந்து சொல்வதாயிருந்தால், என்னுடைய முயற்சிகளையும், என்னுடைய அரசியல் நோக்கங்களையும், நம் இருவரின் ஒருமித்த கனவுகளையும், எல்லாவற்றையும் ஈடேற்றி நம்மை அமைதியிலே உய்ப்பதற்காகவே கடவுள் நம் இருவரையும் இந்த வெள்ளைத் தீவின் கரையிலே ஒன்று சேர்த்திருக்கிறார் என்று நான் கருதுகிறேன். ஆழ்ந்து சிந்தனை செய்து பார்த்தால், இந்த வெள்ளைத் தீவுக்கே ஒரு விடிவு காலம் வரப் போகிறது போலவும், இந்தத் தீவிலிருந்து வெளியேறிய துறவிகளின் ஆசியும், நல்லெண்ணமும் நம் இருவரையும் இயக்குவது போலவும் எல்லாம் என் இதயத்தின் உள் உணர்ச்சி சொல்கிறது. இது வீண் மன மயக்கமோ, அல்லது தன்னேமாற்றமோ இல்லை. புன்னாட்டு மண்ணிலே நீ மன அமைதியோடு காலெடுத்து வைக்கப் போகிறாய் என்பதும், உன்னுடைய தந்தையார் நாட்டு அரசர் குலத்துக்கும் சேரர்களுக்கும் ஒரு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டு அதன் வாயிலாகத் தமிழ் நாட்டு அரசியலின் எதிர் காலத்திலே ஒரு நல்ல திருப்பம் ஏற்படப் போகிறது என்பதும், என்னுடைய கண்களுக்கு இப்போது நன்றாகப் புலனாகிறது. உன்னுடைய ஒப்புதல் ஒன்றுக்காகவே நான் காத்திருக்கிறேன். 'ஆம்' என்ற ஒரு சொல்லுக்காகவே நான் இப்போது உன்னை எதிர் நோக்கி நிற்கிறேன்.

அந்த ஒப்புதலும், அந்தச் சொல்லும் கிடைத்து விட்டால் மறு விநாடியே என்னுடைய...''

''அன்பரே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? என்னிடமிருந்து எதற்கு ஒப்புதல் வேண்டும் என்கிறீர்கள்? இத்தனை வரலாறும், இத்தனை இதயக் கொந்தளிப்பும் தெரிந்த பிறகும், என் சொல் என்று வேறு என்ன சொல்லை நீங்கள் என்னிடமிருந்து எதிர்பார்க்கிறீர்கள்? எனக்குப் புரியவில்லையே!''

நிலவின் ஒளியில் ஒருவரையொருவர் நேருக்கு நேராகப் பார்த்து நின்றார்கள். உறுதியான அந்தத் தருணத்தை எதிர் நோக்கி நின்ற மேகமும் மரங்களும், நிலவுமே ஒரு விநாடி அசைவற்று மோனம் கூடி நின்றன! வேலவன் சொன்னான்:

''வல்லி! நீ வாய் திறந்து ஒரு மொழி சொல்லு. என்னுடைய பேச்சையும், எனது உறுதிமொழியையும் நம்பி, நீ என்னுடன் இந்த வெள்ளைத் தீவிலிருந்து புறப்படச் சம்மதமாயிருக்கிறாய் என்பதைத் தீர்மானமாகச் சொல்லிவிடு! அந்த ஒரு சொல் எத்தகைய ஆற்றலை, எத்தகைய வேகத்தை உண்டாக்குகிறது என்பதை நீயே நேருக்கு நேர் காண்பாய். புன்னாட்டு நீலக்கல் சுரங்கத்தைத் துளு நாட்டு நன்னர்களும், அவர்களுடைய கூட்டாளிகளான கடம்பர்களும் விழுங்கிவிடவேண்டும் என்று ஆசைப்படுவதும், யவனர்களோடு சேர மன்னர்கள் நடத்தி வருகிற கடல் வாணிபத்தைச் சீர்குலைத்துவிட வேண்டும் என்பதற்காகவே இந்தக் கொள்ளைக் கூட்டத்தார்கள் தலையெடுத்திருப்பதும், எங்கள் சேரனாத மன்னர் முக்கூட்டுப் போர் செய்து இந்த அட்டூழியங்களை யெல்லாம் அழித்து ஒழித்துவிட வேண்டும் என்று முனைந்து நிற்பதும், — எல்லாம் அந்த ஒரு சொல்லிலே இப்போது பிணைந்து நிற்கிறது. நீ உறுதியோடு தருகிற மொழியே இத்தனை சிக்கல்களையும் ஒரு விநாடியில் தீர்த்துவிடும் வல்லமை கொண்டது! ஆகையால் நன்றாக மனத்தைத் தெளிவுபடுத்திக் கொண்டு உன்னுடைய குழப்பங்களை யெல்லாம் மறந்து ஒரு முடிவுக்கு இப்போதே வந்துவிட வேண்டும் நீ! அப்படி ஒரு முடிவுக்கு நீ வந்து விட்டால் அதன் பிறகு இந்தக் கடம்பர்களிடமோ அல்லது உன்னுடைய வளர்ப்புத் தந்தையிடமோ எந்தக் காலத்திலும் இரக்கமோ பரிவோ பாசமோ வைத்துக்கொள்ள எள்ளளவும் இடமிருக்க முடியாது! ஆகையால் நீ செய்யப் போகும் தீர்மானம் தெளிவும், உறுதியும், எல்லையற்ற வலிமையும் கொண்டதாக இருக்க வேண்டும். அந்த உறுதிமொழிதான்...''

வேலவன் கோதை சொற்களை முழுதும் முடிக்கவில்லை. மரங்களினூடே ஒரு சலசலப்புக் கேட்டது. அதைத் தொடர்ந்து 'நீலவல்லி!' என்று ஒரு குரல் கேட்டது. வேர்த்து விறுவிறுக்க, நெஞ்சம் படபடக்கக் கையும் காலும் பதற ஓடி வந்தாள் மணிமாலை! வந்த ஓட்டத்தில் அந்த முதிய தோழியின் உடம்பு நிலையற்று ஆடியது.

'' வல்லி ! வல்லி ! தாமதியாமல் ஓடி வா. இந்த விநாடியே நாம் இருவரும் கன்னி மாடத்துக்குள்ளே புகுந்து விடவேண்டும். புறப்படு; புறப்படு!''

மணிமாலையின் படபடப்பு மறுவிநாடி நீலவல்லியின் உடம்பிலே மின்னலாகத் தாக்கியது.

''அன்பரே, எது என்ன ஆனாலும் சரி; இந்த உடம்பிலே உயிரைக் கட்டிப் பிடித்துக் கொண்டு எப்படியும் திரும்பி வந்துவிடுவேன். மறுபடியும் உங்களைச் சமண முறையிலே காண்பேன். இது உறுதி.''

இவ்வாறு சொல்லி அங்கிருந்து மணிமாலையின் பின்னோடு சென்றாள் நீலவல்லி.

(தொடரும்)

## இங்கிதம் தெரியாதவர்கள்

● நம் நாட்டில் மக்கள் வாழ்க்கை நிலையையும் உணர்ச்சிகளையும் புரிந்து கொள்ளாமல் அவ்வப்போது இசைகேடாக அறிக்கை விடவும் பேசவும் நிறையத் தலைவர்களிருக்கிறார்கள். அவர்கள் யாரென்பது முக்கியமல்ல. அவர்கள் விடும் அறிக்கை இவை போன்றவை.

வீடு பற்றி எரிகிற போது...

● இனி நாட்டில் எங்குமே தீ விபத்து ஏற்பட வகை செய்ய மாட்டோம். அமெரிக்காவைவிட நம் நாட்டில் தீ விபத்து மிகக் குறைவு என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

வெள்ளத்தில் மக்கள் மூழ்கிக் கரை காணாமல் தவிக்கும்போது...

● இனி மின்சாரக் கட்டுப்பாடு வராதென்பது மகிழ்ச்சிக்குரியது. இந்தத் தடவை மழை நிறையப் பெய்திருப்பதால் அடுத்த அறுவடை அமோகமாக இருக்கும். எட்டு லட்சத்து எண்பதினாயிரத்து மூந்நூற்று முப்பத்து மூன்று டன் உபரி தானிய விளைவு ஏற்படலாமென்றும் அவைகளைச் சேமித்து வைக்க ஆங்காங்கு மேலும் பல தானியக் கிடங்குகள் கட்டப்படும் என்றும்......

—'[illegible]'

அண்மையில் திரு பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை அவர்களுக்கு எழுபத்தைந்தாண்டு பூர்த்தியாகிறது. அவருக்குப் பாராட்டும் நல்வாழ்த்தும் தெரிவிக்கிற முறையில் அவரது நூல் ஒன்றுக்குக் 'கல்கி' அவர்கள் எழுதிய முன்னுரையினை இங்கு பிரசுரிக்கிறோம். இதற்கு மேலாக நாம் அவரை என்ன பாராட்டிச் சொல்ல முடியும்? இறைவன் அருளால் அவர் பல்லாண்டு வாழப் பிரார்த்திக்கிறோம். — ஆசிரியர்

# அப்பாவும் மகனும்

"அப்பா! முன்னுரை என்றால் என்ன?"

"தம்பி! இந்த மாதிரி கேள்வியெல்லாம் இனிமேல் என்னைக் கேட்காதே!"

"பின்னே யாரைக் கேட்பது?"

"அதைத்தான் சொல்ல வந்தேன். நீ கேட்கும் கேள்விகளுக்கெல்லாம், பதில் சொல்லக் கூடியவர் ஒருவர் இருக்கிறார். அவரைக் கேட்டுத் தெரிந்து கொள்."

"அப்படியா, அப்பா! நான் என்ன கேள்வி கேட்டாலும், அவர் பதில் சொல்வாரோ?"

"பேஷாகச் சொல்லுவார். என்னைப் போல் கோபித்துக் கொள்ளாமல் பொறுமையாகவும், உனக்குப் புரியும்படியாகவும் பதில் சொல்லுவார்."

"நான் ஏதேனும் கேள்வி கேட்டால், உங்களுக்கு ஏன் கோபம் வருகிறது, அப்பா!"

"சில சமயம் நீ கேள்வி கேட்கும் விஷயம் எனக்குத் தெரியாமலிருக்கும், அதனால் கோபம் வரும். அல்லது மனத்துக்குள் உன் கேள்விக்கு எனக்குப் பதில் தெரிந்திருந்தாலும் உனக்கு விளங்கும்படியாகச் சொல்லத் தெரியாமல் இருக்கும், அதனாலும் கோபம் வரும். ஆனால் நல்ல வேளையாக நீ கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் நன்றாகப் பதில் சொல்லக் கூடியவர் ஒருவரைக் கண்டுபிடித்திருக்கிறேன்."

"அவர் யார் அப்பா, அப்படிப்பட்ட பெரியவர்?"

"அவர் பெயர் ஸ்ரீ பொ. திரிகூடசுந்தரம்."

"அவருக்கு எந்த ஊர்?"

"அவர் திருநெல்வேலிக்காரர். தற்சமயம் சென்னையில்தான் தங்கியிருக்கிறார். ஆனால் நீ அவரைத் தேடிக் கொண்டு போக வேண்டியதில்லை. இதோ அவர் எழுதியிருக்கும் 'அப்பாவும் மகனும்' என்ற புத்தகத்தைப் பார். இதில் நீ கேட்கக் கூடிய கேள்விகளுக்கெல்லாம் பதில்கள் இருக்கின்றன."

"எங்கே, கொடுங்கள் பார்க்கலாம் புத்தகத்தை?"

பையன் புத்தகத்தை ஆவலுடன் வாங்கிக் கொண்டான், பக்கங்களைப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தான்.

"தம்பி! இன்னொரு விஷயம்?" என்றேன்.

"அப்பா! இனிமேல் உங்களை நான் கேள்வி ஒன்றும் கேட்கப் போவதில்லை. நீங்களும் என்னுடன் பேச்சுக் கொடுத்துத் தொந்தரவு செய்யாதீர்கள்!"

அவ்வளவுதான்; பையன் புத்தகத்தில் ஆழ்ந்து விட்டான். அப்புறம் அவனிடம் என்னுடைய பாச்சா ஒன்றும் பலிக்கவில்லை. எனவே, நான் சொல்வதற்கிருந்த விஷயங்களை இந்தப் புத்தகத்தைப் படிக்கும் பெரிய வாசகர்களுக்காக எழுதி வைக்கிறேன்.

ஃ ஃ ஃ

ஸ்ரீ பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை அவர்களை முதன் முதலாக இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்பு ஒரு தடவை ரயில் பிரயாணத்தின் போது நான் சந்தித்தேன். அவருடைய சம்பாஷணையில் வெளியான தாமிரபரணி நதிக்கரையில் வளர்ந்து சிறப்படைந்த தமிழர் நாகரிகத்தின் மேன்மையும் பண்பாட்டின் சிறப்பும் என் மனத்தைக் கவர்ந்தன.

அத்தகைய அறிஞர் யார் என்று விசாரித்தேன். அவர் எம். ஏ., பி. எல். பட்டம் பெற்று வக்கீல் தொழில் நடத்தி வந்தவர் என்றும், காந்தி மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து வக்கீல் தொழிலை விட்டவர் என்றும் தெரிந்து கொண்டேன்.

1921ம் வருஷத்தில் மகாத்மா காந்தி ஆரம்பித்த ஒத்துழையாமை இயக்கத்தின் முக்கியமான மூன்று அம்சங்கள் நேயர்களுக்குத் தெரிந்திருக்கும். அவை சட்டசபை பகிஷ்காரம், கோர்ட்டு பகிஷ்காரம், கலாசாலை பகிஷ்காரம் ஆகியவை.

'என்னுடைய இஷ்டத்தை நீங்கள் பரிபூரணமாக நிறைவேற்றி வைத்தால், ஒரு வருஷத்துக்குள் இந்தியா சுயராஜ்யம் அடையும்' என்று காந்திமகான் அந்தக் காலத்தில் சொன்னார். ஒரு வருஷத்தில் சுயராஜ்யம் என்னும் எண்ணம் அநேகருக்கு அளவிலாத உற்சாகம் அளித்தது. இந்த உற்சாகம் காரணமாகப் பலர் ஒத்துழையாமை இயக்கத்தை மேற்



திரு பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை

கொண்டார்கள். பல வக்கீல்கள் வேலையை நிறுத்தினார்கள். பல மாணவர்கள் கலா சாலையைப் பகிஷ்கரித்தார்கள். ஒரு வருஷத்துக்குள் சுயராஜ்யம் கிடைக்காமல் போகவே, பகிஷ்காரம் செய்திருந்தவர்களில் பலர் பழைய படி தத்தம் தொழிலை மேற்கொண்டனர்.

ஒரு சிலர் மட்டும் முன் வைத்த காலைப் பின் வைக்காத தீரர்களாய் விளங்கினார்கள். தங்கள் வாழ்க்கையை அவர்கள் தேசத் தொண்டுக்கே அர்ப்பணம் செய்தார்கள்.

அத்தகைய தீரர்களில் ஸ்ரீ பொ. திரிகூட சுந்தரம் அவர்களும் ஒருவர். காந்தி மகான் சொன்னபடி ஒரு வருஷத்துக்குள் சுயராஜ்யம் கிடைக்காமல் போனதற்காக அவர் மகாத்மாவின் பேரில் குற்றம் சொல்லவில்லை.

அதற்குக் காரணம் இந்தியப் பொது மக்கள் மகாத்மாவின் திட்டத்தைப் பூரணமாக நிறைவேற்றாததுதான் என்பதை அவர் உணர்ந்தார். அறியாமை இருளிலும், சோர்வு மயக்கத்திலும் தேங்கிக் கிடந்த மக்களைத் தட்டி எழுப்பி அறிவுச் சுடர் கொளுத்தி அறியாமையைப் போக்கும் திருத் தொண்டுக்கு அவர் தம்மை அர்ப்பணம் செய்தார்.

ஸ்ரீ பொ. திரிகூடசுந்தரம் முதன் முதலில் செட்டிமார் நாட்டுக்குத் தேசியப் பிரசாரம் செய்யச் சென்றபோது அவருடைய பிரசங்கத்தைக் கேட்க ஆள் சேர்வதே அருமையாய் இருந்தது. தாமே கழுத்தில் தம்பட்டத்தைக் கட்டிக் கொண்டு அடித்து, இந்த நேரத்தில் இந்த இடத்தில் பொதுக்கூட்டம் நடக்கும் என்று தெரியப்படுத்தி ஜனங்களைச் சேர்த்தார். அப்படிப் பொதுக்கூட்டத்துக்கு வந்தவர்கள் திரும்பிப் போகும் எண்ணமே இல்லாமல் மணிக்கணக்காக அவருடைய பிரசங்கத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அப்புறம் எங்கே ஸ்ரீ திரிகூட சுந்தரம் பேசுவதாக இருந்தாலும், அங்கே போகத் தொடங்கினார்கள். அவருடைய பிரசங்கங்களினால் செட்டிமார் நாடு முன் எப்போதுமில்லாத எழுச்சியை அடைந்தது. அந்த நாட்டு இளைஞர்கள் எத்தனையோ பேர் தியாகத் தீயில் குதித்து அதிசயமான வீரச் செயல்களைப் புரிந்தார்கள்.

ஸ்ரீ திரிகூடசுந்தரம் தீவிரமாகத் தேசியப் பிரசாரம் செய்து வந்த காலத்தில் அவருடைய பிரசங்கங்கள் சிலவற்றை நான் கேட்டிருக்கிறேன். பிரபலமான பாகவதர்கள் செய்யும் கதாகாலட்சேபத்தைப் போல் அவருடைய பிரசங்கங்கள் அவ்வளவு ரசமாயிருக்கும்; நகைச்சுவை ததும்பி ஜனங்களைக் குலுங்கிச் சிரிக்க வைக்கும். அதே சமயத்தில் அவர் சொல்லுகிற விஷயங்கள் மறக்க முடியாதபடி மனத்திலே பதிந்து விடும்.

இப்படி இடைவிடாது உழைத்ததன் காரணமாக ஸ்ரீ திரிகூட சுந்தரம் அவர்கள் உடல் நலம் குன்றியது. எந்த வேலையும் செய்ய முடியாத நிலைமை வந்தது. எனவே, நாகர்கோவிலுக்குச் சென்று சில காலம் அஞ்ஞாத வாசம் செய்தார். அமைதியான இல்வாழ்க்கை நடத்தி வந்தார். கொஞ்ச காலம் அவரைப் பற்றித் தகவல் தெரியாமல் இருந்தது. சென்ற வருஷத்தில் நமது நாமக்கல் கவிஞருக்கு நிதிவிழா நடந்த சந்தர்ப்பத்திலேதான் மறுபடியும் அவருடைய அருமையான பிரசங்கங்களைக் கேட்க நேர்ந்தது.

ஸ்ரீ திரிகூடசுந்தரம் அவர்களின் அஞ்ஞாத வாசமும் அமைதியான இல்வாழ்க்கையும் கூட ஒரு முக்கியமான தேச சேவைக்கு அடிப் படையாக அமர்ந்திருப்பதைப் பார்க்கிறேன்.

அந்த இடைக்காலத்தில் குழந்தைகளை நல்ல முறையில் வளர்ப்பதில் ஏற்பட்ட அநுபவத்தைக் கொண்டு ஸ்ரீ பொ. திரிகூட சுந்தரம் தமிழ்நாட்டுக்கு ஒரு தலைசிறந்த தொண்டைச் செய்திருக்கிறார். சில நாளைக்கு முன்பு அவர் எழுதிய "குழந்தைகள் கேள்வியும் பதிலும்" என்ற புத்தகம் வெளிவந்தது. இப்போது இந்த "அப்பாவும் மகனும்" என்னும் புத்தகம் வெளிவந்திருக்கிறது.

இந்த இரண்டு புத்தகங்களையும் வெளியிட்டதன் மூலம் ஸ்ரீ திரிகூடசுந்தரனார் தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்கு ஓர் ஒப்பற்ற உதவியைச் செய்திருக்கிறார். அதைக் காட்டிலும் அதிகமான உதவியைக் குழந்தைகளைப் பெற்ற தாய் தந்தைமார்களுக்கு அவர் செய்திருக்கிறார். அத்துடன் மிகவும் அவசியமான தேச சேவையும் புரிந்திருக்கிறார்.

குழந்தைக் குலத்துக்கும், தேசத்துக்கும் இத்தகைய ஒப்பற்ற தொண்டைச் செய்திருக்கும் ஸ்ரீ திரிகூடசுந்தரம் அவர்களை, வாயார வாழ்த்துகிறேன். குழந்தைகளைப் பெற்ற தாய் தகப்பன்மார்களின் சார்பாக மனமார்ந்த நன்றியையும் அளவில்லாத வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நண்பர் திரிகூடசுந்தரம் பிள்ளை புடம்போட்ட பொன். சீர்திருத்தமா, நாட்டின் விடுதலைப் போராட்டமா, கிழக்கையும் மேற்கையும் தத்துவ வழியிலும் இலக்கிய வழியிலும் விஞ்ஞான வழியிலும் ஒன்று பிணைக்கும் முயற்சியா, புதிய விமரிசனமா, புதிய இலக்கியப் படைப்பா, மொழிபெயர்ப்பா, இளைஞர் இலக்கியமா, பொது அறிவைப் பரப்புதலா, புதிய மருத்துவ முறையா எல்லாவற்றிலும் ஆழத்தில் குதித்து, நீரிற்போல நெருப்பிலும் விளையாடி நந்தனர் போலப் புத்துயிர் பெற்று வெளிவருபவர். ஆளைக் கண்டால் அமைதியே உருவம்; எழுத்தையும் பேச்சையும் கேட்டால் எதிர்பாராத புரட்சியின் வெற்றிக்குரலே கேட்கும். ஆமாம்! எங்கோ இருந்து பிய்த்துக் கொண்டு வந்து இந்த யுகத்தில் தமிழ்நாட்டில் தங்கிய திரிகூட மலைதான். ஐயம் இல்லை. வாழ்க நீடூழி. நண்பர் திரிகூட சுந்தரனார்.

—தெ. பொ. மீனாட்சிசுந்தரம்

## இனிய தமிழ் புத்தகங்களை படித்து அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு !

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

### முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே!

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

### இத் திட்டத்தின் சீரிய அம்சங்கள் :

* சிக்கல்கள் அற்ற சுலபமான வழி.
* வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்க உதவியாக 75க்கு மேற்பட்ட புத்தகப் பதிப்பாளர்களின் பல அரிய புத்தகங்களின் பட்டியல் இலவசமாக தரப்படுகிறது. சென்னை வாசிகள் டிரஸ்டின் அலுவலகத்திற்கு நேரில் விஜயம் செய்தும் வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்கலாம்.
* நாவல், நாடகம், வரலாறு, சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம் சிறுவர் இலக்கியம் போன்ற எல்லாவித புத்தகங்களும் உள்ளன.
* திட்டத்தில் சேரும் நேயர் மாதச் சந்தாவான ரூபாய் ஐந்தைத்தவிர தபால் செலவு போன்ற எவ்விதச் செலவையும் ஏற்கவேண்டாம்.
* டிரஸ்டின் மாத வெளியீடான "புத்தக நண்பன்" என்னும் சஞ்சிகைப் பிரதி ஒன்று அங்கத்தினர்களுக்கு ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படுகிறது.
* 18 மாதங்களில் 12 பரிசுப் புத்தகங்களும் கிடைக்கின்றன.

கீழே கொடுத்துள்ள திட்ட விவரங்களை படித்து உடனே அங்கத்தினராக சேருங்கள்.

1. முதல் மாத சந்தாவான ரூ. 5.00 தென் மொழிப் புத்தக டிரஸ்டாருக்கு கிடைத்தவுடன் சந்தாதாரர் இத் திட்டத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டு அவருக்கு கீழே கண்டவை தபால் மூலம் அனுப்பப்படும் :
    a) பதிவு செய்யப்பட்ட அங்கத்தினர் என்ற ஒரு சீட்டு.
    b) பரிசு புத்தகங்கள் மூன்று. (விளம்பரத்தில் காட்டியுள்ள 10 புத்தகங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுக்கும் 3 புத்தகங்கள்).
    c) ஒரு பெரிய புத்தகப் பட்டியல்.
    d) டிரஸ்டின் மாதவெளியீடான "புத்தக நண்பன்" என்ற சஞ்சிகையின் பிரதி ஒன்று. (இப் பிரதி தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படும்.)
2. 6 மாத சந்தா தொகை செலுத்திய பிறகு அங்கத்தினர்களுக்கு டிரஸ்டார் கீழ்க்கண்டவைகளை அனுப்புவார்கள் :
    a) ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்கள்.
    b) பரிசு புத்தகங்கள் மூன்று.

    மேற்கண்டவைகளைப் பெற, அங்கத்தினர்கள் ஏற்கனவே பெற்ற புத்தகப் பட்டியலிலிருந்து சுமார் ரூ. 75-00 மதிப்புள்ள புத்தகங்களைப் பொறுக்கி அதோடு பரிசுப் புத்தகங்கள் லிஸ்டிலிருந்து தனக்கு விருப்பமான 3 புத்தகங்களையும் குறிப்பிட்டு டிரஸ்டுக்கு தெரிவிக்க வேண்டும். இத் தகவல் கிடைத்தவுடன் டிரஸ்டார் ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்களும் 3 பரிசு புத்தகங்களும் அங்கத்தினருக்கு எவ்வித செலவுமின்றி அனுப்பி வைப்பார்கள்.
3. 12 மாத சந்தா செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு டிரஸ்டார் மறுபடியும் ரூ. 30·00 மதிப்புள்ள அங்கத்தினரே தேர்ந்தெடுத்த புத்தகங்களும், மேலும் 3 பரிசு புத்தகங்களும் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் மேற்சொன்னபடி செய்யவேண்டும்.

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன?**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் "புத்தக நண்பன்" 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

**இலவசம்!**
**இப் பத்து புத்தகங்களில் ஏதேனும் மூன்று!**


காதல் வாழ்க்கை


ஏழாவது குதிரை


வளரும் விஞ்ஞான வித்தைகள்


நாகரீகச் சித்திரங்கள்


அரசியல் கைதி முதலிய வங்கச் சிறுகதைகள்


மிருகங்களுடன் 3 மணி


புதுத் தமிழ்க் கவி மலர்கள்


ரதோத்சவம்


நிலம் தரும் செல்வம்


தாயார் கொடுத்த தனம்

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள்:**

### தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

"வீட்டு நூலகம்" அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம் அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள பத்து பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1
2
3

பெயர் ........................................

ஊர் : ........................ கையொப்பம் ........................................

தேதி : ........................ முழு விலாசம் ........................................

........................................

*குறிப்பு: சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.
வரும் பொங்கல் தினத்துக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்.

## அத்தியாயம் 17

'இன்னிக்கு டூட்டி ஓர்க்ஷாப்பிலே இல்லே. காளியண்ணனோட உடும்புக் கொட்டகையிலேதான்'' என்றான் மாயாண்டி தனக்குத்தானே சொல்லிக் கொள்வதுபோல்.

''அதுக்கு என்னய்யா? எங்கே டூட்டி போடறாங்களோ அங்கே போய்ச் செய்ய வேண்டியதுதானே? எனக்கு எதுக்கய்யா நோட்டீசு? பகலைக்குச் சோறு சொமந்துக்கினு வருவேன்னு நினைச்சியா?'' என்று சீறினாள் அங்காயி.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே அங்கி. நான் வரேன்'' என்று கூறிவிட்டு வெளியே நடந்தான் மாயாண்டி.

மூலைக் கடைத் திருப்பத்தில் திரும்பி அவன் சென்றபோது அவனுக்கு முன்னே சற்றுத் தூரத்தில் காளியண்ணன் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தான். வலது கையில் மூங்கில் கூடையும் தூண்டில் குச்சியும் எடுத்துக் கொண்டு மதகுக் கரைக்கு மீன் பிடிக்கச் சென்று கொண்டிருந்தான் காளியண்ணன். அவனுக்கு உடம்பு சரியாகி வேலையில் வந்து சேர்ந்த பிறகு முதலாவது வார விடுமுறை இன்றுதான். பழைய வழக்கத்தை விடாமல் விடுமுறையை அனுபவிப்பதற்காக அவன் மதகுக் கரைக்குச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்து மாயாண்டியின் பூஞ்சை மனம் பொங்கி வழிந்தது. கண்களைத் துடைத்து விட்டவாறு வேகமாக நடந்து காளியண்ணன் அருகே சென்றான்.



''என்ன காளி, கருக்கல்லேயே புறப் ட்டுட்டாப்பலே'' என்றான்.

''கருக்கலா இது? வெய்யில் ஏறிப் போச் சென்னு நான் துடிச்சுக்கிட்டிருக்கேன். தண்ணி சூடாக ஆக மீனெல்லாம் கலேஞ்சு போயிடும் தெரியுமில்லே?'' என்றான் காளி.

மாயாண்டி பெருமூச்செறிந்தான். 'இந்த மாதிரி நீ மீன் பிடிக்கப் போற தைப் பார்த்து எவ்வளவு நாளாயிடுச்சு!'' என்றான்.

''பழசை நெனேச்சு இப்ப என்னப்பா அங்கலாய்ப்பு? இப் பப் பாக்கறேல்லே, அது போதாதா?'' என்றான் காளியண்ணன்.

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

முதல் பரிசு நாவல்

''அது சரித்தான்! காளி என்னவோ, என் மனசுக்குக் கஷ்டமாயிருந்திச்சு, சொல்லிட்டேன்.''

''கஷ்டம், என்னய்யா கஷ்டம்? எனக்கென்ன குறைச்சல் இப்போ? கை இல்லேன்னு மனுசன் செத்தா போயிடுவான்? தெம்பு இல்லாத கோழைதான் இல்லாததை நெனேச்சு மூக்காலே அழுவான். எனக்கு இன்னொரு கை முழுசா இருக்கே, அதை நெனேச்சு சந்தோஷப்படு. ரெண்டு காலும் முழுசா இருக்கே, அதை நினேச்சுச் சந்தோஷப்படு'' என்றான் காளி.

தன்னேத்தானே நொந்துகொண்டே, மாயாண்டி காளியண்ணன் கூறுவதற்கெல்லாம் தலையை ஆட்டியவாறு அவனுடன் நடந்தான்.

உடும்புக் கொட்டகைக்குக் கூப்பிடு தூரத்தில் மதகுக் கரைக்குச் செல்லும் பாதை பிரிந்தது. அங்கிருந்து அத்தி மரக் கேட்டருகே கார் நிற்பதைக் கண்டுவிட்ட மாயாண்டி பரபரப்படைந்தான்.

''அந்த ஐயாங்க ரெண்டு பேரும் வந்திட்டாங்க. எனக்காகத்தான் காத்திருக்காங்க போலிருக்கு'' என்று கூறியவாறு வேகமாக நடக்க ஆரம்பித்தான் மாயாண்டி.

''ஏனய்யா பயந்து சாகறே. அவங்க காத்திருந்தா என்ன முழுகிப் போயிடும்? டூட்டி நேரம் தவறிடலேயே நீ? இதோ பாரு'' என்று வலது கையில் கட்டியிருந்த கடிகாரத்தை அவன் முகத்துக்கு நேரே நீட்டிய காளி, ''பார்த்தாயய்யா, இன்னும் பத்து நிமிஷங்கள் பாக்கி யிருக்கு. அதுக்குள்ளே பத்துத் தரம் உடும்புக் கொட்டகைக்குப் போய் வந்திடலாமே?'' என்றான்.

''சரி காளி, நான் வரேன்.''

''கொஞ்சம் பொறு. கொட்டகைத் தோட்டத்தைக் கொத்திவிட்டு நாளாகுது. இன்னிக்கு ஒய்வு நேரம் கிடைக்கும்போது அந்த வேலையைக் கவனி. பூச்செடிக்குக் கீழே எல்லாம் களேயில்லாமே கொத்திவிட்டு உரம் போட்டுடு. முட்டைக்கோஸ் பாத்தியையும் காரட் பாத்தியையும் இலேசாக் கிளறிக் குடுத்தால் போதும்'' என்று கூறினன் காளியண்ணன்.

''சரி சரி. ஒண்ணு விடாமே கவனிக்கிறேன்'' என்று கூறியபடி மாயாண்டி ஓட்டமும் நடையுமாக உடும்புக் கொட்டகையை நோக்கி விரைந்தான்.

''பூஞ்சைப் பய'' என்று தனக்குள் கூறியவாறு மதகுக் கரையை நோக்கி நடந்தான் காளியண்ணன்.

மீன் பிடிக்கும் பொழுதுபோக்குக்குக் காளியண்ணன் மதகுக் கரையைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் இருந்தது. நாற்புறமும் மரங்கள் செறிந்த அந்த மதகுக் கரையில் வெய்யில் ஏறுவதைப் பற்றிய கவலே யில்லாமல் மணிக் கணக்காக உட்கார்ந்திருக்க முடிந்தது. அந்தக் குளிர்ந்த நிழலே நாடி மீன்களும் கூட்டம் கூட்டமாக அங்கு வந்து வந்து வட்டம் போட்டுக் கொண்டிருக்கும். தூண்டிலேப் போட்ட சில நிமிஷங்களுக்குள்ளேயே ஏதாவது ஒரு மீன் வந்து சிக்காம லிருப்பதில்லே. காலேயில் சாப்பிட்ட நாயர் கடைத் தோசை ஜீரணமாகி நன்றாகப் பசி எடுப்பதற்குள் மூங்கில் கூடையில் மூக்கால்வாசிக்கு மீன் சேர்ந்துவிடும். பொழுது போக்குக்குப் பொழுது போக்கு, லாபத்துக்கு லாபம்தானே.

மூங்கில் கூடையையும் தூண்டில் குச்சியையும் கரையில் வைத்துவிட்டுத் தனது வழக்கமான இடத்தில் காலே தொங்கப் போட்டுக் கொண்டு உட்கார்ந்த காளியண்ணன் சட்டைப் பையிலிருந்த ஒரு பீடியை எடுத்து வாயில் பிடித்துக் கொண்டு நெருப்புப் பெட்டியைக் கையில் எடுத்தான். இரண்டாவது கை இல்லே யென்ற குறையை அப்போதுதான் அவன் உணர்ந்தான். சட்டையின் இடது கை அநாதையாகத் தொங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்து ஒரு வெறுமைச் சிரிப்புச் சிரித்தவன், நெருப்புப் பெட்டியைக் கால்விரல்களுக்கிடையே பிடித்துக்கொண்டு குச்சியை அதில் கிழித்துப் பீடியைப் பற்ற வைத்துக் கொண்டான்.

தூண்டில் முள்ளில் மண் புழுவைக் கோப்பதற்கும் ஆரம்பத்தில் அவன் சிறிது கஷ்டப்பட வேண்டி யிருந்தது. மதகுக் கரையில் சிறிதளவு சிமெண்ட் பெயர்ந்து போன ஒரு பள்ளத்தில் புழுவை வைத்துத் தூண்டில் முள்ளால் அதைக் குத்தி எடுக்க முயற்சி செய்தபோது முள்ளில் எடுபடாமல் புழு வழுக்கி வழுக்கி நகர்ந்து அவனுக்குச் சிறிது எரிச்சலே ஊட்டியது. ஆனால் விரைவிலேயே அந்தக் கலே அவனுக்குக் கைவந்ததாகி விட்டது. முள்ளில் சரியாக ஏற்றப்படாததால், முதலில் நாலேந்து புழுக்கள் மீனுக்கு இரையாகி வீணுகி விட்டாலும், அதன் பிறகு மீன்கள் சிக்கஆரம்பித்துவிட்டன. ஐந்துக்கு மூன்று பழுதில்லாமல் அடுத்தடுத்து மீன்களேப் பிடித்துக் கூடையில் போட முடிந்தது.

சிக்கிய மீன்களைத் தூண்டிலிலிருந்து விடுவிப்பதற்கும் அவன் முதலில் சிறிது சிரமப்பட வேண்டி யிருந்தது. ஒவ்வொரு தடவையும் மீன் சிக்கியதும் தூண்டில்குச்சியைக் கரையில் வைத்து விட்டுத் தூண்டில் கயிற்றின் நுனியைக் கால் விரலில் சுற்றிக் கொண்டு துள்ளித் துடித்துக் கொண்டிருக்கும் மீனை முள்ளிலிருந்து விடுவிக்க வேண்டியிருந்தது. ஆனால் நாலைந்து தடவைகள் இவ்வாறு செய்து பழக்கப்பட்டதும் அதுவே அவனுக்கு இயல்பாகி விட்டது. பழைய சுவாரசியம் குன்றாமல் அந்தப் பொழுது போக்கில் ஈடுபட்டிருந்தான்.

உடும்புக் கொட்டகை வேலையைப் பற்றி அவனுக்குக் கவலையில்லை. ஒரு கையாலேயே அதைச் சமாளிக்க முடிந்தது. ஆயிற்று, ஒரு வாரமாகிவிட்டதே, மறுபடியும் டூட்டிக்குப் போக ஆரம்பித்து! இரண்டாவது கைக்குத் தேவையே ஏற்படவில்லை. என்ன பிரமாத வேலை அது? விசையை அழுத்துவதற்கு ஒரு கை போதாதா? கவனம் தான் தேவை. அந்தப் பக்கம் இந்தப் பக்கம் நகராமல் எப்போதும் விழிப்புடன் இருந்து பாராக் கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும். இந்த நான்கு வருஷங்களாக அவனுடைய வலது கை மட்டும்தான் அந்த வேலைக்குத் தேவையாக இருந்தது என்ற உண்மையை இந்த ஒரு வார அனுபவத்தில் தெரிந்து கொண்டதை நினைத்தபோது காளியண்ணனுக்குச் சிரிப்பே வந்தது. "ஒரு கை போனதால் நான் அரை ஆளாகி விடவில்லை. எப்போதும் போல் முழு மனிதனாகத்தான் இருக்கிறேன்" என்று நினைத்துக் கொண்டான்.

சட்டென்று தூண்டிலில் ஒரு மீன் சிக்கியது. தூண்டிலைச் சுண்டி யிழுத்தான் காளி. துள்ளித் துடிக்கும் மீனுடன் தூண்டில் மேலே பறந்தது. பறந்த மீனை மறுபடியும் தன் பக்கம் இழுப்பதற்காகக் காளி தூண்டில் குச்சியைத் தணித்தபோது பின்னாலிருந்து ஏதோ பிடித்திழுப்பது போன்ற உணர்வு ஏற்படவே, வியப்புடன் திரும்பிப் பார்த்தான். கையில் பிடித்து மீனைத் தூண்டிலிலிருந்து விடுவித்த வாறு நின்று கொண்டிருந்தாள் மங்கா.

"மங்கா, என்ன இது? என்ன செய்யறே?"

"பார்த்துக்கிட்டுத்தானே இருக்கே. உன் மீனைப் பச்சையாய்த் தின்னிட மாட்டேன். பயப்படாதே" என்று கூறிக் கொண்டே விடுவித்த மீனைக் கூடையில் போட்ட மங்கா, அப்படியே



## விமானத்தின் வாலில் தொங்கிய பெண்!

தமாரா புகால் என்ற 18 வயதும் பெண், பைலோ ரஷ்யக் கூட்டுப் பண்ணையில் பணியாற்றுகிறாள்.

அவள் ஒரு நாள் "யாக் - 12" என்ற விமானத்தின் வால் பகுதியில் ரசாயன உரங்களை அடைத்துக் கொண்டிருந்தாள். அவள் வேலை முடிந்ததும், 'ரெடி' என்று விமானியை நோக்கிக் கூவினாள். ஆனால், அவள் கீழே குதிப்பதற்குள் விமானம் எழும்பத் தொடங்கியது. அவளது கூச்சல் விமானியின் காதில் விழவில்லை. அவர் அந்தப் பண்ணை முழுவதிலும் 15 நிமிடங்கள் வட்டமிட்டு, உரத்தைத் தூவினார். விமானத்தைத் தரையில் இறக்கி விட்டு, அவர் வெளியே வந்தபோது விமானத்தின் வாலில் தமாரா தொங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்! பதினைந்து நிமிடம் விமானத்தின் வாலில் தொங்கிய தமாராவுக்குக் காயம் ஏதும் ஏற்படவில்லை; ஆனால், அவள் மயக்க முற்றிருந்தாள். -- டாஸ்

மதகுக் கரையில் குத்துக் கல்லின் மீது உட்கார்ந்தாள்.

"புழு எங்கே வச்சிருக்கே?"

"நானே கோத்துக்கிடறேன் புள்ளே!"

"ஏன், நான் கோத்தா மீன் கடிக்காமே மொகத்தைத் திருப்பிக்கிட்டுப் போயிடுமோ?" என்று கூறிய மங்கா, காளியண்ணன் இடுப்பில் தொங்கிக் கொண்டிருந்த புழுப் பையை வெடுக்கென்று பிடுங்கிக் கையில் எடுத்துக் கொண்டாள். அதிலிருந்து ஒரு புழுவைத் தூண்டிலில் கோத்துக் காளியண்ணன் பக்கமாக எறிந்து, "இப்ப வீசு தண்ணியிலே. ஒரே நிமிஷத்திலே மீன் சிக்கலேன்னு என்னு கேளு" என்றாள், தன் கை விரல்களுக்கு முத்தம் கொடுத்தவாறு.

"அட, கைராசிக்கு முத்தம் வேறயா?" என்று புன்னகையுடன் கூறிக்கொண்டே காளி தூண்டிலைத் தண்ணீரில் வீசினான்.

மங்கா சொன்னது பொய்த்துப் போகவில்லை. தூண்டிலைப் போட்ட மறு நிமிஷத்துக்குள் மீன் கடிக்கும்

உணர்வு ஏற்படவே காளி தூண்டிக் கயிற்றைச் சுண்டி இழுத்தான்.

வெள்ளி மயமான வரால்மீன் ஒன்று துள்ளித் துடித்தவாறு தூண்டிலில் பறந்து வந்தது. லாகவமாக அதைக் கையில் பிடித்துக் காளியின் முகத்துக்கு நேரே காட்டினாள் மங்கா.

''இதுக்கென்ன சொல்றே?''

''பரவாயில்லே புள்ளே. மொக ராசி இல்லாட்டாலும் கைராசி பிரமாதமாகத்தான் இருக்கு'' என்றான் காளியண்ணன்.

''மொக ராசியிலே என்னய்யா கொறச்சலைக் கண்டுட்டே?'' என்றாள் மங்கா, புழுவைக் கோத்தவாறு.

''உன்னைக் கண்டு பயந்து ஓடற வங்களைக் கேளு.''

''அவங்களைப் பத்தி இப்ப என்ன? நீ பயந்து ஓடறியா சொல்லு.''

''நானா? பயந்து ஓடறதா? உன்னைக் கண்டா? ஆளைப் பாரு!'' என்று சிரித்துக் கொண்டே காளி தூண்டிலைத் தண்ணீரில் வீசினான்.

சற்று நேரம் மீன் பிடிப்பு வேலை மௌனமாக நடந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு தரம் மீன் சிக்கியதும் மங்கா மீனை எடுத்துக் கூடையில் போட்டுவிட்டுத் தூண்டிலில் புழுவைக் கோத்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய இந்த ஒத்துழைப்பினால் கூடையில் மீன்கள் மளமளவென்று நிறைந்து கொண்டிருந்தன.

திடீரென்று காளியண்ணன், மௌனத்தைக் கலைத்தான்.

''ஏன் மங்கா, இந்த மாதிரி உன்னாலே எப்படி வர முடிஞ்சுது?''

''எப்படி வர முடிஞ்சுதுன்னா? நடந்துதான் வந்தேன்.''

''அதுக்கில்லே புள்ளே. வீட்டிலே உங்க ஆத்தா உடம்பு முடியாமப் படுத்திருக்கும்போது நீ ஊர் சுத்திக் கிட்டுத் திரியறயே — எப்படீ?''

''நான் வீட்டிலே உக்காந்து என்ன செய்யணும்? நான் உக்காந்திருக்கறதைப் பார்த்தாலே ஆத்தாவுக்குக் கோவம் வந்திடுது. ஏதாவது தொண தொணவென்று என்னைத் திட்ட ஆரம்பிக்குது. அதைக் கேக்க எனக்குப் பொறுமை இல்லே.''

''ஆஸ்பத்திரிலேந்து மருந்து வாங்கிக் கொடுக்கறேல்லே?''

''முனியாண்டியண்ணன்தான் கிழூர் டாக்டர்கிட்டச் சொல்லி மருந்து வாங்கிட்டு வந்து குடுத்துது. இப்ப குணம்தான். நேத்து டாக்டர் ஐயாவே நேரிலே வந்து ஆத்தா உடம்பை ரப்பார்க் குழாயும் அதுவும் இதுவும் வச்சுச் சோதனை செய்தாரு. ஆத்தாவுக்கு நெஞ்சிலே பலமே இல்லையாம். இனிமே வேலைக்கே போகக் கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லிட்டாரு டாக்டரய்யா. அவ்வளவுதான். ஆத்தா அழுவறதுக்குக் கேக்கணுமா? டாக்டரய்யா போன பிறகு ரொம்ப நேரம் வரைக்கும் அழுதுக்கிட்டிருந்துச்சு'' என்றாள் மங்கா.

கொஞ்ச நேரத்துக்குக் காளியண்ணன் எதுவுமே பேசவில்லை. மௌன யோசனையில் ஆழ்ந்தவனாக மீன் பிடிக்கும் வேலையைச் செய்து கொண்டிருந்தான்.

''மங்கா, ஒண்ணு சொல்லறேன். கேப்பியா?''

''என்ன?''

''ஆத்தாவை அழைச்சுக்கிட்டு எங்க வீட்டுக்கு வந்திடு.''

''எதுக்கய்யா?''

''ஆத்தா வேலைக்குப் போகலைன்னா உன்னை யாரு காப்பாத்துவாங்க?''

''அட, நீதான் என்னைக் காப்பாத்திடப் போறியோ? உனக்கு என்னய்யா அக்கறை?''

''அக்கறையோடதான் பேசறேன், புள்ளே. அதுக்கு வேண்டிய உரிமையையும் தேடிக்கிட முடியும். உன்னை நானே கலியாணம் கட்டிக்கிடறேன்.''

குத்துக்கல்லில் உட்கார்ந்திருந்த மங்கா சட்டென்று எழுந்தாள்.

''என்னய்யா, பேச்சு எப்படியெப்படியோ போகுதே. கையில்லாத ஆளுக்குக் கலியாணம் என்னய்யா கலியாணம்?''

''மங்கா, கையில்லேன்னு இன்னொரு தரம் சொன்னே, வெட்டிப் போடுவேன் வெட்டி.''

''வெட்டற ஆளைப் பாரு. பாவம், கையில்லாமே கஷ்டப்பட்டுக்கிட்டிருக்கியேன்னு மீன் பிடிக்கிறதிலே ஒத்தாசை செய்ய வந்தா, அதைச் சாக்கு வைச்சுக்கிட்டு, ஏதேதோ பேச ஆரம்பிக்கிறியே. மங்கா ஏமாந்தவள்னு நெனைச்சயா?''

''சீ! வாயை மூடு, போனாப் போகுதுன்னு உனக்கு நல்லதைச் சொல்ல வந்தா, என்னமோ எகிறிக் குதிக்கிறயே? ஆத்தாவும் வேலைக்குப் போகாமே, நீயும் ஊர் சுத்திக்கிட்டு இருந்தா உங்க பொழைப்பு நடக்கறது எப்படி?''

''ஏன் நடக்காது? ஆத்தா வேலைக்குப் போகாட்டி என்ன? நான் என்ன

நொண்டியா, மொடமா? இந்த மங்காவை என்னன்னு நெனைச்சேய்யா? ரெண்டு கையாலேயும் உழைச்சு எங்க ஆத்தாவுக்குச் சோறு போட்டுக் காப்பாத்துவேன். உன்னைப் போல ஒரு கையை வச்சிக்கிட்டு ஊரை ஏமாத்திக் கிட்டுத் திரிய மாட்டேன்.''

''என்ன சொன்னே?'' என்று உக்கிரமாகக் கத்திக் கொண்டே ஒற்றைக் கையை ஊன்றிக் கொண்டு எழுந்தான் காளியண்ணன்.

''போய்யா சரித்தான். உருட்டி முழிச்சிட்டா ஒத்தக் கையி ரெட்டைக் கையாயிடுமா?'' என்று சிரித்தாள் மங்கா.

''உன்னைத் தொலைச்சிடறேன் தொலைச்சி!'' என்று கறுவிக் கொண்டே காளியண்ணன் கையை நீட்டி அவளை எட்டிப் பிடிக்க முயன்றான்.

வரால் மீனைப் போல் வளைந்து துள்ளி அவன் பிடிக்கு எட்டாமல் ஓடினாள் மங்கா.

சிறிது தூரம் அவளைத் துரத்திச் சென்ற காளியண்ணன் சட்டென்று தூண்டில் கயிற்றை அவளை நோக்கி வீசினான். தூண்டில் முள் குருவிக் கூடாயிருந்த அவள் கூந்தலில் மாட்டிக்கொண்டு அவளை நிறுத்தி இழுத்தது. மங்காவின் திகைப்பு அடங்குவதற்குள் காளியண்ணன் முன்னே பாய்ந்து, அவள் கூந்தலைப் பற்றிக் கொண்டான்.

''கை இல்லேன்னு இன்னொரு தரம் சொல்லுவியா?, சொல்லுவியா?'' என்று அவள் கூந்தலைப் பிடித்துப் பலமாகக் குலுக்கினான்.

''சொல்லுவேன், சொல்லுவேன், நூறு தரம் சொல்லுவேன்....விடய்யா தலையை'' என்று திமிறிய மங்கா, சட்டென்று தலையைத் திருப்பி அவன் கையைக் கடித்து விட்டாள்.

''ஆ'' வென்று கத்திக்கொண்டே, கூந்தலை விட்டுவிட்டுக் கையை உதறிய காளி, அந்தக் குச்சியாலேயே அவளை அடிக்க ஆரம்பித்தான்.

''அண்ணே, என்ன இது? ஏன் மங்காவை அடிக்கறே?'' என்று கேட்டுக் கொண்டே அங்கே ஓடிவந்தாள் வள்ளி.

''அவளையே கேளு'' என்று அலட்சியமாகக் கூறிய காளி மீண்டும் மதகுக் கரையில் போய் உட்கார்ந்தான்.

''மங்கா, என்ன நடந்தது?'' என்று அவளை அணைத்தவாறு கேட்டாள் வள்ளி.

''ஒண்ணும் நடக்கலே அக்கா. வெறகுக் கட்டையாலே அடி தாங்கற உடம்பு இது. தூண்டில் குச்சி எம்மாத்திரம்?''



மகள்: அப்பா! தினமும் ஆபீஸ் போக உங்களுக்கு கார் கிடைக்காமல் நான் எடுத்துக் கொண்டு போகிற காரணம் என்ன என்று கேட்பீங்களே! காரணத்தை உங்களுக்கு அறிமுகப்படுத்த வந்தேன்!

என்று கூறிச் சிரித்துக் கொண்டே அங்கிருந்து நடக்க ஆரம்பித்தாள் மங்கா. வள்ளி அவளைத் தொடர்ந்து சென்றாள்.

காளி மறுபடியும் தூண்டிலைத் தண்ணீரில் வீசி, மீன் அதைக் கொத்துவதற்காகக் காத்துக் கொண்டு அதிலேயே கவனமாக இருந்தான்.

''காளி, காளி'' என்று அழைத்துக் கொண்டே அவனை நோக்கி ஓடி வந்தான் மாயாண்டி.

தண்ணீரிலிருந்து கண்களை எடுக்காமலே காளி, ''என்ன?'' என்றான் அதட்டலாக.

''நடக்காத அதிசயம் நடந்திடுச்சு. அங்கி எனக்குச் சாப்பாடு கொண்டு வந்து குடுத்திடுச்சு. பிரமாதமான புலவுச் சோறு. உன்னை விட்டுட்டுத் துன்னப் புடிக்கலே. இந்தா'' என்று இலையில் எடுத்து வந்த புலவுச் சோற்றை அவனருகே வைத்தான் மாயாண்டி.

அந்த அப்பாவியின் சந்தோஷத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் மனநிலை காளிக்கு அப்போது ஏது? குச்சியாலேயே அந்த இலையைச் சோற்றுடன் தண்ணீரில் தள்ளிவிட்டு மீன்கள் அதைச் சாப்பிடப் போட்டி போட்டுக் கொண்டு நாலா பக்கத்திலிருந்தும் வந்து மொய்ப்பதைப் பார்த்தவாறு உட்கார்ந்திருந்தான். மாயாண்டி திகைப்புடன் விக்கித்துப் போய் நின்றான்.

(தொடரும்)



## வல்லவன் ஒருவன்

சேலம், மாடர்ன் தியேட்டர்ஸாரின் 'வல்லவர்கள்' வரிசையில் வெளிவந்துள்ள இந்தப் படம் காட்சிக்குக் காட்சி ரஸிகர்களின் கரகோஷத்தைப் பெறுகிறது. காரணம், (Panic in Bangkok) என்னும் ஆங்கிலப் படத்தை அப்படியே தமிழாக்கம் செய்திருப்பதுதான்!

பயங்கரச் சதிகாரக் கும்பலை அடியோடு நாசமாக்க ஒரு வல்லவன் புறப்படுகிறான், துணிவையும் புத்தி நுட்பத்தையும் மட்டுமே துணையாகக் கொண்டு. அவனைப் பலவிதத்திலும் தீர்த்துக்கட்ட முயல்கிறான் வில்லன். கடைசியில் வல்லவன் வில்லனைத் தீர்த்துக் கட்டி விடுகிறான்.

ஆங்கிலப் படத்திலிருந்து ஒரு காட்சியைக் கூட மாற்றியமைக்க முயலவில்லை. ஆனாலும் சில அசட்டுக் காதல் காட்சிகளும், சங்கடமான 'ட்விஸ்ட்' நடனங்களும் இது ஒரு தமிழ்ப் படம்தான் என்பதை நன்றாகக் காட்டிக் கொடுத்து விடுகின்றனவே!

ஜெயசங்கர் திறமையாக நடித்திருக்கிறார். சண்டைக் காட்சிகளில் மிக லாகவமாக எதிரிகளைச் சுடுகிறார்; அவர்களைக் காலால் தட்டிக் கரணம் போடச் செய்கிறார். எல். விஜயலட்சுமி இதுவரை எத்தனையோ படங்களில் தோன்றியும், அவரால் நல்ல நடிப்பைப் பிடித்துக் கொள்ள முடியவில்லை.

வில்லன் மனோகர் நிதானமாகவும் அழுத்தமாகவும் பேசியே தமது பாத்திரத்தை நிலை நிறுத்திக் கொள்கிறார்.

ஆலப்புழை அம்முக்குட்டியாக வரும் புஷ்பமாலா தேங்காய் சீனிவாசனுடன் சேர்ந்து எல்லாரையும் சிரிக்க வைக்கிறார்.

ஒலிப்பதிவு, ஒளிப்பதிவு, வெளிப்புறக் காட்சிகள் ஆகிய எதிலும் குறை சொல்ல முடியாமல் தயாரித்திருக்கும் இந்தப் படத்தில், 'ஆங்கிலப் படத்தின் தழுவல்' என்று ஒரு வாக்கியம் வெளியிட்டிருந்தால் மிகவும் கண்ணியமாயிருந்திருக்கும். இதன் ஆங்கில மூலப் படத்தைப் பார்க்காதவர்கள் இதைப் பார்த்தால் அயர்ந்து போவார்கள்! ஆனால், ஆங்கிலப் படத்தைப் பார்த்தவர்கள்.....!

## இந்தோனீசிய ராமாயண நாடகம்

'சிங்களம் புட்பகம், சாவகம் ஆதிய தீவு' பலவினை வென்றதோடு நம் கலைச் செல்வங்களையும் பரிசாக அளித்து வந்துள்ளனர் நம் முன்னோர். பாரத நாட்டின் பொக்கிஷமான ராமாயணம் இந்தோனீசியாவுக்கும் நீண்ட நெடுங்காலமாகக் கலைச் செல்வமாகத் திகழ்ந்து வருகிறது. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்தே இந்தோனீசியாவில் ராமாயண நாட்டிய நாடகத்தை நடத்துவது அவர்கள் பண்பாடாகத் திகழ்ந்து வருகிறது. இந்நாட்டிய நாடகத்தை ஆறு பாகங்களாகப் பிரித்துக் கொண்டு ஆறு மாதங்களுக்கு — ஒவ்வொரு பௌர்ணமி இரவின்போதும் ஒரு பாகம் என்ற முறையில் — திறந்தவெளி அரங்கில் நடத்துவார்கள்.

சென்னை மியூஸிக் அகாடமியில் இந்தோனீசிய பாலே நடனக் குழுவினர் மூன்று நாட்கள் தங்கள் ராமாயண நாட்டிய நாடகத்தை நடத்திச் சபையோரின் பாராட்டுதலைப் பெற்றனர். இந்த இந்தோனீசிய ராமாயண நாட்டிய நாடகத்தை அவர்கள் தங்கள் நாட்டின் பண்புக்கேற்ப இசையமைப்புடன் வழங்குகின்றனர். ஆதி கவி வால்மீகி ராமாயணத்திலிருந்து அதிக வித்தியாசமில்லாமல் அமைந்துள்ள இந்த 'பாலே' ராவண தர்பாரில் மூக்கறுந்த சூர்ப்பனகை ராமனையும் சீதையையும் பற்றி விவரிக்கும் காட்சியில் தொடங்குகிறது. பிறகு மாரீசனை அனுப்புவதும் சீதையை அபகரிக்கும் காட்சியும் தொடருகின்றன. ராமன் சுக்ரீவனின் நட்பைப் பெற்று, ராவணேசுவரனை அழித்து, கடைசியில் அக்கினியால் சீதையின் புனிதத்தைச் சோதிக்கிறான். ராமனும் சீதையும் இணைகின்றனர். விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்வதுடன் நாட்டிய நாடகம் முடிவுறுகிறது.

கவர்னர் பதவியைவிடத் தாம் கலைஞர் என்பதில் பெருமிதமுறும் ஜாகர்தாவின் கவர்னர், இளவரசர் பாகு ஆலம் நடனக் கலையில் தேர்ந்தவர். அவரது அருமைக் குமாரி சீதை வேடம் புனைந்து நாட்டிய நாடகத்தைப் பரிமளிக்கச் செய்தார். நடனக் கலையில் தேர்ந்த இவருக்கு விற்பயிற்சியிலும் அநுபவம் உண்டாம்.

ராவணனாக வரும் ஸர்ஜுந்தோவிடம் ராவணனுக்குரிய அட்டகாசத்தை யெல்லாம் அன்று கண்டோம். ராவணன் ஜடாயுவை அழிக்கும் காட்சியில் அவரது உக்கிரம் தெளிவாக விளங்கியது.

ஸலக்ஸோனாவும், ஸுகர்தோவும் ராமலக்ஷ்மணர்களாக வந்து நாட்டிய நாடகத்துக்குத் தெய்வீகத்தை ஊட்டினர். ஜடாயுவின் வீர மரணத்துக்குப் பிறகு, ராமலக்ஷ்மணர்கள் தங்களுக்குச் சீதையைப் பற்றி விளக்கம் தந்த ஜடாயுவுக்குச் சொர்க்க பதவி அளிக்கப் பிரார்த்திப்பது தெய்வீகத் தன்மைக்குச் சான்றாகும்.

ஹனுமான் பாத்திரம் பக்திக்கும், சேவைக்கும், வீரத்துக்கும் உரிய பாத்திரம். இதை மர்கதி ஏற்றுத் திறம்படச் செய்தார்.

பக்தி, தெய்வீகம், பண்பு அனைத்தும் கொண்டிருந்த இந்தோனீசிய நாட்டிய நாடகம் கண்ணுக்கு விருந்தாக அமைந்திருந்தது. மேடையின் பின்னால் அமர்ந்து, வாத்திய இசைக் கலைஞர்கள் சமயத்துக்கேற்றபடி நாட்டிய நாடகத்துக்கு இசை வழங்கி உயிரூட்டினர். அவர்களது மொழியைத் தெரிந்து கொள்ளாமலே நாம் இந்த நாட்டிய நாடகத்தை அநுபவிக்க முடிந்தது. நம் பரம்பரைச் செல்வமான ராமாயணத்தை விளக்கி வைக்காமலே அவர்களது நடனத்திலிருந்து புரிந்து கொண்டுவிட முடியாதா? இந்தியா — இந்தோனீசிய நட்புக்கு இந்த ராமாயண நாட்டிய நாடகம் சேதுப் பாலமாகத் திகழுமாக.









சென்னை மியூஸிக் அகாடமியில் நிகழ்ந்த இந்தோனீசிய ராமாயண நாட்டிய நாடகத்தில் சில காட்சிகளைக் காணலாம்.

# பூரணமான இருமல் கட்டுப்பாட்டுக்கு




# க்ளைகோடின்

## டெர்ப் வசாகா

க்ளைகோடினுடைய மருத்துவ அங்கீகாரம் பெற்ற பார்முலா, இருமலால் பாதிக்கப்பட்ட பல இடங்களிலிருந்தும் இருமலை விரட்டியடித்துவிடுகிறது. க்ளைகோடினின் செயல் திறன்: ● மூளையில்—க்ளைகோடின், தன்னியல்பாக வரும் இருமலைத் தூண்டும் இருமல் கேந்திரத்தை சரியான சமயத்தில் பத்திரமாகவும், பயனுள்ள முறையிலும் கட்டுப்படுத்துகிறது ● தொண்டையில்—க்ளைகோடின் அடைப்பை அகற்றி எரிச்சலையும் வலியையும் ஆசுவாசப்படுத்தி, தொண்டையின் மென்மையான பகுதிகளை, கிருமிகள் பாதிக்காமல் பத்திரமாகப் பாதுகாக்கிறது ● மார்பில்—க்ளைகோடின், சுவாசக் குழாய்கள் மற்றும் மார்பின் இறுகிய தசைகளைத் தளர்த்தி, கஷ்டமின்றி சுவாசிக்க உதவுகிறது ● நுரையீரல்களில்—மூச்சுத் திணறவைக்கும் சளியைக் கரைத்து, 'ஆழப் படிந்த' சளியை அகற்றி, அடைப்பை நீக்குகிறது.

எப்பொழுதும் க்ளைகோடின் கைவசம் இருக்கட்டும்.



**க்ளைகோடின்—30 வருடங்களுக்கு மேலாக மிகவும் அதிகமாக விற்பனையாகும் கைகண்ட வீட்டுநிவாரணி**

4 அளவுகளில் கிடைக்கிறது • அலெம்பிக் தயாரிப்பு *Alembic*

everest/363 i/Acw tm




# சத்திய யுகம்

## எம்.எஸ்.கல்யாண சுந்தரம்

"என் 'டியூட்டி'யில் ஒரு மணி நேரம் இன்று நீர் செய்கிறீரா, பத்திரன்?"

"சரி!"

"எனக்கு இரவு வேலை, மிஸ்டர் பிள்ளை; ஆனால் குழந்தைக்கு ஒரே ஜுரம்; உம் பகல் டியூட்டியை மாற்றிக் கொள்கிறீரா? ரொம்ப ரொம்ப...."

"எனக்கு ஆட்சேபமில்லை. அதிகாரி ஒப்புக் கொள்ள வேண்டும். போன வாரம் எனக்கு இரவு வேலை யிருந்தது."

"ரொம்ப நன்றி!"

உள்ளம் கனிந்த இந்தப் பரோபகாரி யார்?

வீர பத்திரன் பிள்ளை ஒரு தந்திக் குமாஸ்தா. எப்பொழுதும் இனிய சிரித்த முகம். இனிமை என்றால் இளிச்சவாயன் இனிமையல்ல; நாடக மேடை இனிமையல்ல; சங்கடம் என்னும் வெள்ளாவியில் வைத்ததும் தன் சாயம் வெளுப்பதோடு இதர துணிகளைக் கெடுக்கும் போலி இனிமையல்ல. வாழ்க்கையில் பல இன்னல்களைக் கண்டு ஆர அமரச் சிந்தித்துப் பக்குவம் அடைந்த—'இது அற்ப விஷயம், தாற்காலிகமானது, இதற்காக மனம் கசப்பானேன்' என்று சொல்லி, சில்லறை விஷயங்களின் தம்பிடித் தன்மையை அறியக் கூடிய — கோபுரத்தின் உச்சியிலிருந்து பார்த்து, ஊர்த் தெருக்களின் சிறு மேடு பள்ளங்களின் சிறுமையை உணரக் கூடிய—தத்துவ அனுபவம் பெற்ற இனிமை.

கூட உழைக்கும் தந்திக் குமாஸ்தாக்களின் அவசரத் தேவையை உத்தேசித்து அவர்களுடைய வேண்டுகோளுக்கு அவர் இணங்குவார்; செய்த உபகாரத்தை இலேசாக மறந்து விடுவார். அவருடைய பாட்டி அடிக்கடி சொல்லும் வார்த்தையொன்று அவர் மனத்தில் உறுதியாகப் பதிந்திருந்தது. "சக்தி இருக்கிறவரை உழைக்கிறேன்பா. வஞ்சகம் பண்ணலை. கடப்பாறைக் கம்பியை உபயோகிச்சுக்கிண்டே இருந்தால் அதன் நுனி

தேவும். தேவக் கூடாதுன்னு பரன் மேலே போட்டு வச்சாலோ முழுதும் துருப்புடிச்சுப் போகும். எது தேவலே? மூச்சு தொண்டைக் குழிக்கு வரப்போ 'முப்பது விசை இருக்க வேண்டியவ ஏன் இருபது விசைதான் இருக்கே, உன்னை ஏத்துக்க மாட்டேன்'னு யமன் சொல்லப் போறதில்லே.''

இதையெல்லாம் கேட்டு வீரபத்திரன் தாடி நரைத்த வயோதிகர் என்று நினைத்து விடவேண்டாம். வயது இருபத்திமூன்று இருபத்திநாலுதான். திறந்த கோட், காலர், டை, நிஜார் முதலான ஆடைகள் பொருத்தமாக அணிந்து பளபளப்பான புதிய சைக்கிளில் — அது ஒரு லேடீஸ் சைக்கிள் — காரியாலயத்துக்குச் செல்வார். விவாகமாகவில்லை. உயர்தர ஹோட்டல் ஒன்றில் வசதியான அறையில் சௌக்கியமாக வாழ்ந்து, தம்மைத் தேடி வரும் நண்பர்களை நன்கு உபசரிப்பார். நல்ல புத்தகங்களும், பத்திரிகைகளும் வாங்குவார். பகுத்தறிவுடன் சினிமாப் படங்களை ரசிப்பார்.

நடக்கும்போது அவர் இடதுபுறம் சற்றுச் சாய்ந்து, சாய்ந்து அடியெடுத்து வைப்பார். ஒவ்வொரு சமயம் சுருக்கென்ற வலியின் அறிகுறி முகத்தில் தோன்றும். ஆனால் அநுதாபி எவரேனும் எதிரே இருந்துவிட்டால் முகச் சுளிப்பைச் சட்டென மென்மையான சிரிப்பாய் மறைத்துக் கொண்டு ''ஒன்றுமில்லை'' என்று ஆங்கிலத்தில் சமாதானம் அளிப்பார். அதற்குக் காரணம் இடது முழங்கால் முட்டிக்குக் கீழே அவருடைய கால் செயற்கையானது. இரண்டாம் உலகப் போரின்போது வெடி குண்டுச் சில்லு ஒன்றால் ஏற்பட்ட துன்பம்; அதன் விளைவு.

ஒரு சமயம் அவர் விழுப்புரத்தில் வேலையிருக்கையில் ஓர் உபாத்தியாயினியுடன் அவருக்குப் பரிச்சயம் ஏற்பட்டது. அது தற்செயலான நிகழ்ச்சி. இரண்டு மாதங்களாக அவர் ஆவலோடு விசாரித்துக் கொண்டிருந்த ஒரு புஸ்தகம் நூல் நிலையத்திலிருந்து அவருக்குக் கிடைத்தது. அது பதிவாகும்போதே அவர் ஆர்வத்துடன் அதன் பக்கங்களைத் திருப்பிக் கொண்டிருந்தார். அந்தச் சமயம் அந்த உபாத்தியாயினி வந்து நிலைய குமாஸ்தாவிடம் அதே நூலின் பெயரைக் குறிப்பிட்டு, ''இன்றைக்காவது என் அதிர்ஷ்டம் சரியாக இருக்கிறதா?'' என்று சலுகையுடன் ஆங்கிலத்தில் விசாரித்தாள். விஷயத்தைப் புரிந்துகொண்ட வீரபத்திரன் புத்தகத்தைக் காட்டி, ''இதற்காக நீங்களும் 'க்யூ'வில் நிற்கிறீர்களா?'' என்று கேட்டார். அவள் இவர் பக்கம் மதிப்பிடும் பார்வை ஒன்று வீசிவிட்டு, ''மூன்று மாதங்களாய்த் தொடர்ந்து நடக்கிறேன்'' என்று சிரிக்கும் குரலில் மிருதுவாய் விடையளித்தாள்.

வீரபத்திரன், ''அப்படியானால் இதை எடுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் திருப்பித் தரும் சமயம் தெரிந்தால் அப்பொழுது நான் வாங்கிக் கொள்கிறேன்'' என்று யோசனை கூறினார். எதிர்பார்க்கக் கூடிய உபசார மறுதலிப்பு சமாதானங்கள் பரிமாறப்பட்டன. கடைசியில் உபாத்தியாயினி மீனாட்சி அப்புத்தகத்துடன் தன் இருப்பிடம் சென்றாள்.

மீனாட்சி தன் தாயுடன் சிக்கன வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தாள். அவளுடைய தகப்பனார் இறந்து போய் விட்டதாலும் பிழைப்பு வசதி விசேஷமாக வேறொன்றும் இல்லாததாலும் அவள் உழைத்துச் சம்பாதிக்க வேண்டியிருந்தது. அவள் சொந்த ஊர் மதுரைப் பக்கம். உறவினரின் காரணமாக உபகாரத்துக்குப் பதில் துன்பமும் நஷ்டமும் அதிகமாகி வந்ததால் நல்ல வாய்ப்புக் கிடைத்ததும் தாயும் பெண்ணும் விழுப்புரம் வந்து சேர்ந்து விட்டார்கள். மொத்தத்தில் அது திருப்திகரமாகவே இருந்தது.

வீரபத்திரனும் மீனாட்சியும் மேலும் ஒன்றிரண்டு முறை நூல் நிலையத்திலும் சினிமாக்களிலும் இலக்கிய அல்லது கலைக்கூட்டங்களிலும் சந்தித்தார்கள். அவர்களிடையே பரஸ்பர நல்லபிப்பிராயமும் அன்பும் வளர்ந்தன. வீரபத்திரனும் மதுரை ஜில்லாக்காரர் என்பது தெரிந்ததும் மீனாட்சியின் தாயார் அவரிடம் வாத்ஸல்யத்துடன் நடந்து கொண்டாள். உட்பிரிவில் சிறிது வேறுபாடு இருந்தாலும் இரு குடும்பத்தாரும் ஒரே ஜாதியினர்; ஆகவே விவாகப் பேச்சு கிளப்புவதில் அதிக நேரம் பிடிக்கவில்லை.

பிள்ளையும் மீனாட்சியும் இன்பமான கற்பனை உலகில் வாழ்ந்து வந்தார்கள். இந்தச் செய்தி கேள்விப்பட்ட தந்தி குமாஸ்தாக்கள்— ''டி. வி. பிள்ளை மணம் புரிந்து கொண்டுவிட்டால் நமக்கு ஓரளவு அசௌகரியந்தான்; டயப்படி தம் வேலையை மாத்திரம் கவனித்துக் கொள்வார். இருந்தாலும் அவருக்கு நல்ல வாழ்த்துப் பரிசு அளிக்க வேண்டும். என்ன அளிப்போம்? கலைக்களஞ்சியம் ஒரு செட் என்ன விலையாகும்?' என்று பேசிக் கொண்டார்கள்.

ஆனால் அக்கற்பனைகளின் மேல் ஓர் அணுகுண்டு விழுந்து விட்டது. மீனாட்சியின் அத்தை ஒருத்தி, சுமாராக நல்ல நிலைமையில் இருந்தும்கூட தன் அண்ணியின் சோதனைக் காலத்தில் புத்திசாலித்தனமாக எட்டி நின்றவள், இப்பொழுது வீரபத்திரனைப் பற்றித் துப்பு விசாரிக்கும்படி தன் கணவனைத் தூண்டினாள். அதன் பயனாகச் சில ரசமான தகவல்கள் கிடைத்தன. வீரபத்திரனின் கால் வெடிகுண்டு காயத்தின் காரணமாக அறுக்கப்பட்டது என்பது வெறும் புரளியாம்; பர்மா எல்லையில் கண்காணாத தேசத்தில் தன்னந்தனியாக இருக்கும்போது ஒரு கோரமான நோயின் காரணமாகக் காலைத் துண்டிக்க வேண்டிய நிலை ஏற்பட்டதாம். ஆகவே — அது விரும்பக்கூடிய சம்பந்தமல்ல, வீண் வம்பு எதற்கு, எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ, இருக்கும் துன்பம் போதாதா — என்பது போன்ற ஹிதோபதேசங்களை அத்தை மீனாட்சியின் காதில் விழும்படி செய்தாள். மற்ற உறவினரிடமும், ''இப்படி இப்படிச் சங்கதி. பிறர் பேச்சு நமக்கு எதற்கு? இருந்தாலும் மனத்தில் போட்டு வையுங்கள். நான் சொன்னதாக வெளியே வரவேண்டாம்'' என்று சொல்லி அந்தச் செய்தி நன்கு பரவுவதற்கான ஏற்பாட்டைப் பக்குவமாகச் செய்தாள்.

# சமய சஞ்சீவி!

















## வலிதான் எங்கள் பிரச்சினை...

### உங்களுக்கு நாங்கள் உதவக்கூடிய விதம் இதுதான்!

ஆராய்ச்சி: 'ஆஸ்ப்ரோ' ஆராய்ச்சிக் கழகத்தில் ஒரு ஆராய்ச்சிக் குழுவின் தலைமை விஞ்ஞானி. எங்களுடைய பணியிலேயே சிறந்த மேன்மேலும் சிறந்த முறையைக் கண்டுபிடிப்பதே. இந்தப் பிரச்சினையில் ஆழ்ந்த ஊக்கம் கொண்டுள்ள உலகத்தின் முதன்மையான பல கழகங்களும் எங்களுடையதும் ஒன்று. வலிக்கு, இக்காலத்தில், சிறந்த ஒரே விடை 'ஆஸ்ப்ரோ' பார்முலாதான் என்பதை நாங்கள் இன்று அறிவோம். அதனால்தான் அது உலக முழுவதும் உள்ள டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் பயன்படுத்தப்படுகிறது. வலி என்பது என்ன? உயிர்ப்பொருள் உடல் வேகத்திற்கும் மேலாக, மிக விரைவாகத் திசுக்களில் சேர்ந்து குவிந்து, ஒரு "மறைமுகமான" வீக்கத்திற்குக் காரணமாகிவிட, அது நரம்புகளின் அழுத்தத்தின் மூலம் வலி ஏற்படுகிறது.

'ஆஸ்ப்ரோ' இயங்குவது எப்படி? 'ஆஸ்ப்ரோ' உடனடியாக இரண்டறக் கலந்துவிடுகிறது—வீக்கத்தை நீக்கி—நரம்புகளின் மீதிருக்கும் அழுத்தத்தைப் போக்கி—வலியை வெளியே இழுத்துவிடுகிறது.

இவைகளுக்கு 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: வலி • தலைவலி • உடல்வலி • பல்வலி • மூட்டு வலி • ஜுரவேகத்துடன்கூடிய ஜலதோஷம் • ஃப்ளு • டெங்கு.

அளவு:

பெரியவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவையானால் மீண்டும் இதே அளவில் உபயோகிக்கவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டரின் சொற்படி.




## 'ஆஸ்ப்ரோ'

வலியை வெளியே இழுத்துவிடுகிறது

AG· 33-66

செய்தி வீரபத்திரனின் செவிக்கு எட்டிய தும் அவர் மீனாட்சியிடம் 'அவனுக்கு என்ன தோன்றுகிறது?' என்று கேட்டதற்கு அவள் மனம் குழம்பி, ''தீயில்லாமல் புகையில்லை என்பார்கள். நடந்ததுதான் என்ன?'' என்று பதிலுக்கு வினவினாள்.

ஒரு ராணுவ டாக்டரின் தவறால் - முழுதும் அவர் மேலும் குறை கூறுவதற்கில்லை— நிகழ்ந்த ஆயுள் பரியந்தத் திமையைப் பிள்ளை விவரமாகச் சொன்னார்.

போரின் இறுதி நாட்களில் அவர் அஸ்ஸாம் எல்லையில் கொஹிமா பட்டணத்தில் ராணுவத் தந்தி முகாமில் வேலையிருந்தார். அவ்வூரில் முன் நாட்களில் கலெக்டராக இருந்த ஓர் ஆங்கிலேயன் தேவைக்கு அதிகமாகவே பருமனான கல் சுவர்களால் தன் பங்களாவைக் கட்டுவித்திருந்தான். அவனுக்கு டென்னிஸ் ஆட்டத்தில் ஆர்வம் அதிகமாகையால் ஒரு பந்தடி மேடையும் தயாரிக்க விரும்பினான். மழை அதிகமாயுள்ள அந்தப் பிரதேசத்தில் கப்பிக்கல் விளையாட்டு ஸ்தலமும் பயன் படாது, புல் தரையும் அசௌகரியமானது என்று நினைத்த அவன், திடமான சிமெண்டு கோர்ட்டு நிறுவத் தீர்மானித்தான். அவனுடைய பிடிவாதமோ, எஞ்சினீயரின் மிகைச் செய்கையோ சொல்வதற்கில்லை, ஓர் அடிக்கும் அதிக கனமான தளம் சிமெண்டு ஜல்லிக் கலவையால் பக்குவமாகப் போடப்பட்டது. அக்காலத்தில் அதை யெல்லாம் பார்த்துப் பலர் நகைத்தனர். ஆனால் யுத்தம் கொஹிமாவை நெருங்கியதும் அக்கட்டடங்கள் ஜப்பானிய வெடிகுண்டை எதிர்த்து நிற்கும் அரண்களாகப் பரிணமித்தன. பந்தடி மேடைக்கு அடியில் ஆள் உயரத்துக்கு மண் குடையப்பட்டதும் அது சிறந்த குகை அல்லது நிலவறையாகப் பயன்பட்டது. அதன் வாசலில் யந்திரத் துப்பாக்கிச் சிப்பாய்கள் காவல் காத்து நின்றனர்.

நாட்கள் செல்லச் செல்ல, அந்த இருட்டாலும், சரக் கசிவால் உண்டான மக்கின நச்சாவியின் புழுக்கத்தாலும் வெறுப்படைந்த பிள்ளை ஒரு நாள் கண்டிப்பான கட்டளையையும் மீறிச் சற்றுக் கால் வீசி உலாவி வரப் புறப்பட்டார். காவலாளர்களுக்குப் 'பிள்ளை பாபு'விடம் ரொம்பப் பிரியம். அந்தி சூரியனின் ஒளிதான் எவ்வளவு அதிசயமாக ஆனந்தமாக இருந்தது! சுத்தமான-வறண்ட காற்றின் நறுமணத்தைத்தான் என்னவென்று வர்ணிப்பது! அது எப்படிச் சாராய சாரம் போல மண்டைக்கேறிற்று! பிள்ளை இவ்வாறு சுவர்க்க சுகம் அநுபவித்துக் கொண்டிருக்கும் போதே — ஹோ ! என்ற இரைச்சல். 'டமார் டமார்' என்ற முழக்கம். பூமி பிளப்பதுபோல் அதிர்ச்சி. இடது காலில் சுரீர் என்று ஏதோ தைத்தது. குனிந்து தொட்டுப் பார்த்தால் ரத்தப் பெருக்கு. வெடித்த குண்டின் சில் ஒன்று கெண்டைச் சதையில் பதிந்து விட்டது. பிள்ளை தம் கைக் குட்டையால் ஒரு கட்டுப் போட்டுக்கொண்டு நொண்டி நொண்டி நடந்து நிலவறையில் தம் பகுதிக்குச் சென்று காயத்தைக் கழுவி அதனுள்ளிருந்த ஒரு சிறு உலோகத் துண்டைக்




கத்தியால் நெம்பி எடுத்தெறிந்துவிட்டுக் கைவசமிருந்த ஒரு மருந்தைத் தடவித் துணிப் பட்டையைக் கட்டினார். முறையான சிகிச்சைக்காக டாக்டரிடம் செல்வதற்கில்லை. ''வெளியே ஏன் போனாய்?'' என்று கேட்டுத் தொல்லைப்படுத்துவார்கள். காவல் புரியும் சிப்பாய்களுக்கும் தண்டனை கிடைக்கும்.

துரதிர்ஷ்டவசமாகக் காயம் ஆறவில்லை; சீழ் கோத்தது. புரை ஏறிக் குழிப் புண் ஏற்பட்டது. பிதற்றல் புலம்பலுடன் காய்ச்சல் அடித்தது; மயக்கம் போட்டது. அவர் டாக்டரிடம் அனுப்பப்பட்டார். அதற்குள் சதை மிகவும் அழுகி, சகிக்க முடியாத துர் நாற்றம் வீச ஆரம்பித்து விட்டது.

டாக்டர் தாமோதர் தாவே பம்பாய்க் காரர். நோயாளி மதுரை ஜில்லாக்காரர் என்று தெரிந்ததும், இது 'மதுரைக் கால்' என்று தீர்மானித்து, அழுகல் மேலும் பரவுவதற்கு முன் கெட்ட பாகத்தை

பட்டணத்துக் கொசு!




வெட்டிவிட வேண்டும் என்று சொல்லி அவ்வாறே செய்து விட்டார். முதல் முறையாக 'மெஜுரா ஃபுட்ஸ்கேஸ்' ஒன்று பார்த்ததில் அவருக்குப் பரம திருப்தி.

புண் ஆறி, பென்ஷன் பிரச்னை கிளம்பும் போதுதான் தமக்கு ஏற்படவிருக்கும் பெரும் கேடு பிள்ளைக்கு விளங்கிற்று. விதிப்படி தமக்குண்டான கடமையைச் செலுத்தும்போது காயப்பட்டுக் காலை இழந்தால் கணிசமான நஷ்டஈடும் பென்ஷனும் கிடைக்கும். அவ்வாறின்றி ''நோயாளி மதுரைக்காரன்; மதுரைக் கால் நோய் உடலில் ஏற்கனவே உண்டாகி மறைந்திருந்தது. அதனால் வேலையிலிருந்து விலக நேர்ந்தது'' என்று நிபந்தனைகள் காகிதத்தில் பதியப்பட்டு விட்டதால் நஷ்ட ஈடு கிடைக்கவில்லை; பென்ஷன் தொகையும் பெயரளவுக்கே நிர்ணயமாயிற்று.

மதுரை தந்தி நிலையத்தில் இருக்கும் நாட்களில் அவரிடம் அன்பாயிருந்த ஒரு மேலதிகாரியின் சகோதரரான ஒரு டாக்டர் முழு தகவலும் விசாரித்து வைத்திய நூல்களிலிருந்து படித்துக் காட்டி, டாக்டர் தாவே அந்த முடிவுக்கு வந்திருக்கவே கூடாது, அவசரப்பட்டு விட்டார் என்பதை விளக்கி, பிள்ளை பெயரளவுக்கே மதுரை ஜில்லாக்காரர்; உண்மையில் அவர் திருவாங்கூர் எல்லையைச் சேர்ந்தவர், அப் பிரதேசத்தில் மதுரைக் கால் கிடையவே கிடையாது என்று காரணங்கள் கூறி அப்பீல் செய்யச் சொன்னார். ஒன்றும் பயனில்லை. பிள்ளை பம்பாய் மாகாணத்துக்குச் சென்றார். தற்சமயம் சிறு பிள்ளை நோய்களில் சிறந்த அமெரிக்கப் பயிற்சி பெற்று நிபுணராகி, கூடை கூடையாகச் சம்பாதித்துக் குவிக்கும் டாக்டர் தாவேயைச் சந்தித்து உண்மையைக் கூறி, 'இது மெஜுரா ஃபுட் கேஸல்ல' என்று எழுதித் தரச் சொல்லி மன்றாடினார். அந்த டாக்டருக்கு இத்தனை வருஷங்களுக்குப் பிறகு தம் பெயர் இச் சச்சரவில் இழுபடுவது இஷ்டமில்லை. ஒரு நாளைக்கு ரூபாய் ஐந்நூறு சம்பாதிப்பவர் அவர். மேலும் உண்மையைச் சொன்னால், பிள்ளையின் காயம் தன் கடமையைச் செலுத்தும்போது ஏற்பட்டது என்று ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது. ஆகையால் இனறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக முடியும் என்றும் அவருக்குத் தோன்றிற்று. ஆகவே ஊர் திரும்பிச் சென்று வாய் மூடிக் கொண்டிருக்கும்படி பிள்ளைக்கு அவர் யோசனை கூறினார். மேலும் பிள்ளை பம்பாய் விட்டுப் புறப்படுவதற்கு முன் அவருக்கு அமெரிக்காவிலிருந்து 'ஸாம்பிளாக'ப் புதிதாக வந்திருந்த புது ரக செயற்கைக் கால் ஒன்றை டாக்டர் அன்பளிப்பாகக் கொடுத்தார். இதுதான் சமாசாரம்.

மீனாட்சி நல்லவள்; ஆனால் பாவம், திடமனமில்லாதவள். அவள் தாயார் ''ஒவ்வொருவரும் தமக்கு அனுகூலமான விளக்கந்தான் கொடுப்பார்கள் அம்மா. எதை நம்புவது, எதை நம்பாமல் விடுவது? நோய் பரம்பரை வியாதியாக இருந்து பிறக்கவிருக்கும் உயிர்களைப் பாதித்தால் என்ன செய்வது? 'கூடைப் பழத்தில் ஒன்றில் மாத்திரம் விஷம் செலுத்தப்பட்டது உண்மைதான். ஆனால் இது அதுவாக இருக்காது; தைரியமாகச் சாப்பிடு' என்றால் யார் சாப்பிடுவார்கள்? என்னமோ அம்மா, உன் விருப்பம். நீங்கள் படித்தவர்கள். உங்களுக்குத் தெரியாதது நான் என்ன சொல்லப் போகிறேன். ஆனால் நான் ஆற்றோரத்து மரம்; நீயோ ஆயிரம் காலத்துப் பயிர்'' என்ற கருத்துப்படப் பேசினாள்.

வீரபத்திரன் கடைசியாக ''உனக்குச் சம்மதமானால் இந்தப் பிரச்னைக்கு ஒரு நல்ல விடை இருக்கிறது. உலகத்தின் நோக்கில் கணவன் மனைவியாகவும், உண்மையில் அண்ணன் தங்கையாகவும் நாம் வாழ்க்கை நடத்தலாம். நான் சம்பந்தப்பட்ட வரையில் திருமண முகூர்த்தம் மேன்மையான மறு பிறப்புப் பெறும் சுப முகூர்த்தமாகும்'' என்று சொல்லிப் பார்த்தார். ஆவேசம் நிறைந்த கண்ணீருடன் அவருக்கு நமஸ்கரித்து, அவர் பாதங்களைத் தொட்டுக் கண்களில் ஒத்திக் கொண்டு, அவள் அவ்விடம் விட்டு நகர்ந்தாள். பதில் ஏதும் சொல்லவில்லை. ஆனால் மறுநாளே அவள் வைத்திய சர்டிபிகேட் சமர்ப்பித்து ஒரு மாத ரஜா வாங்கிக் கொண்டு தாயுடன் ஊருக்குச் சென்று விட்டாள்.

அத்தை என்றுமில்லாத அன்புடன் அவரை உபசரித்து நன்றாய்க் குழையடித்து மீனாட்சிக்கும் தன் மகன் சபாபதிக்கும் விவாகம் முடித்து வைத்தாள். சபாபதி ஒரு பிரபல ஆங்கிலேய மருந்து உற்பத்திக் கம்பெனியில் ஏஜண்டு.

மேற்படி திருமணம் நடக்கவிருக்கிறது என்ற செய்தி கிடைத்ததும் வீரபத்திரன் மீனாட்சியின் க்ஷேமத்துக்காகப் பிரார்த்தனை செய்து அவள் பெயரில் நான்கைந்து பத்திரிகைகளுக்குச் சந்தாக் கட்டினார். அதுவே அவருடைய அன்பளிப்பு.

C I B A




# பினகா டால்க்

## புதுத் தோற்றத்துடன் மீண்டும் வருகிறது

என்றும் போலப் புதுமையும், மென்மையும் கொண்ட சேர்த்தியான பவுடர். இன்ப நினைவைப் போல நீடித்து நிற்கும், பரவசமூட்டும் சுகந்தமும், சருமத்தை மழமழவென வைத்திருக்கும் விசேஷ எண்ணெய்ப் பொருள்களும் அடங்கியது!

CIBA 66/69 TAM.




கண்ணைப் பறிக்கும் வெண்மை! கச்சிதமான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல்...அதன் எல்லை கடந்த வல்லமை! ஏராளமான நுரை, சலவையே வெகு எளிது. சிறுவர் ஆடை, சட்டை, சேலை....எதற்கும் நிகரில்லாத வெண்மை, சிகரமான தூய்மை. கைப்பட வீட்டிலே சலவை செய்திடவே கைகண்ட துணை ஸர்ப்.

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

லின்டாஸ்-SU.49-140 TH

ஏமாற்றம் நிறைந்த—சுவர்க்கத்துக்கு இட்டுச் சென்று நரகத்தில் பிடித்துத் தள்ளிய விழுப்புரத்தில் மேலும் வசிக்க விரும்பாதவராய் அவர் வேறு ஊருக்கு மாற்றம் கேட்டார். அச்சமயம் அவருக்கு வேலை உயர்வு கிடைக்க வேண்டியது. அவர் டெலிகிராப் மாஸ்டராக வால்டேர் (விசாகப்பட்டினம்) அனுப்பப்பட்டார். புது இடமும், புது முகங்களும், புதுப் பொறுப்புக்களும் அவர் மனத்துக்கு இதமாக இருந்தன.

ஒரு நாள் மாலை அவர் ஒரு கடைக்குச் சென்றார். – ஒரு சிறு 'ரெடிமேட்' சொக்காய் வாங்க — ஓராண்டு பூர்த்தியாகவிருக்கும் மீனாட்சியின் மகனுக்காக! கையணைப்பில் அவள் மகன். பக்கத்தில்?— அவள் கணவர்? அறிமுகச் சடங்கின்போது 'ஆம்' என்ற விடை கிடைத்தது.

அதிர்ச்சியடைந்த மீனாட்சி சட்டெனச் சமாளித்துக் கொண்டு ''அண்ணா! நீங்கள் இங்கேதானிருக்கிறீர்களா? நாங்கள் வந்து ஒரு மாதமாகிறது. இவ்வூருக்கு மாற்றலாகி விட்டது. நீங்கள் இருப்பது எங்களுக்குத் தெரியவில்லையே! மிகவும் இளைத்திருக்கிறீர்களே! என் அத்தான்; வீரபத்திரபிள்ளை – பலமுறை சொல்லியிருக்கிறேன்.'' என்றாள்.

சபாபதி புதிய நண்பரின் கையை அன்புடன் ஏற்று க்ஷேம லாபம் விசாரித்துத் தம் இருப்பிடத்துக்கு வரும்படி அழைத்தான். அதன் பிறகு அவர்கள் வந்த காரியத்தைக் கவனித்தார்கள். வீரபத்திரன் தாம் முதலில் நினைத்ததைக் காட்டிலும் விலையுயர்ந்த ஒரு சொக்காய் வாங்கிக் குழந்தையின் கையில் கொடுத்துத் தபால் செலவு லாபம் செய்வித்ததற்காக நன்றி கூறினார். கடைச் சிப்பந்திகள் அனைவரும் நிலைமையை ரசித்தார்கள்.

ஞாயிறுதோறும் வீரபத்திரனுக்குச் சபாபதி பிள்ளை வீட்டில் பகல் சாப்பாடு என்று தீர்மானமாயிற்று. ஒவ்வொரு சமயம் விற்பனை சம்பந்தமாக வெளியூர் சென்ற சபாபதி அன்று திரும்பியிருக்க மாட்டார். அப்பொழுதும் அழைப்பு அமுலில் இருந்தது.

சில மாதங்கள் கழிந்தன. வீரபத்திரன் வழக்கம் போல் அன்பர்கள் வீட்டுக்குச் சென்ற போது சபாபதி ஊரில் இல்லை; மீனா, துவண்ட சுரத்தற்ற குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு கண்ணீருடன் வேலைக்காரனிடம் தன் அரைகுறைத் தெலுங்கில் வீரபத்திரகாருவை அவசரமாய் அழைத்து வரும்படி சொல்லிக் கொண்டிருந்தாள். பிள்ளை நிலைமையைப் புரிந்து கொண்டு சட்டெனச் சைக்கிளில் சென்று ஒரு டாக்டரை அழைத்து வந்தார். டாக்டர் எல்லாத் தகவலும் விசாரித்துக் கொண்டு மேல்வாரியான சில சோதனைகள் நடத்தியபின் குழந்தையை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வதே உசிதம் என்றார். திகிலடைந்த மீனாட்சி நண்பரின் ஆறுதல் மொழிகளைக் கேட்டு ஓரளவு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டாள். ஆஸ்பத்திரியில் நுட்பமான சோதனைகள் நடந்தன; இதர டாக்டர்களும் தம் அபிப்பிராயங்களை அறிவித்தார்கள். அது சிறு பிள்ளை வாதம் — 'போலியோ' என்பது அவர்கள் முடிவு. அந்த வார்த்தையைக் கேட்டதும் வீரபத்திரனுக்குக் காரணம் கூற முடியாத அளவு மனம் இடிந்து போய் விட்டது.

குழந்தை ஆஸ்பத்திரியிலேயே தங்க வேண்டி வந்தது. அழுது அழுது முகம் வீங்கிய மீனாட்சியை வீரபத்திரன் அவள் இல்லத்தில் கொண்டு சேர்த்து ருசியாகக் காப்பி போட்டுக் கொடுத்து தேறாட்டனி விருந்து உணவு கொண்டு வரும்படி வேலையாளிடம் சொல்லிவிட்டுச் சபாபதிக்குத் தந்தி அனுப்புவதற்காக வெளியே சென்றார். சபாபதி அன்று குறிப்பாக எந்த ஊரில் இருப்பார் என்ற நிச்சயமில்லாததால் வீரபத்திரன் உத்தேசமாக இரண்டு மூன்று ஊர்களுக்குத் தந்தியனுப்பினார்.

அத்தந்திச் செய்தியை எழுதும்போதே அவருக்குச் சடாரென்று இன்னொரு யோசனை தோன்றிற்று. டாக்டர் தாமோதர் தாவே போலியோ சிகிச்சையில் சிறந்த நிபுணர்; வெற்றிகரமான சில நுட்ப செய்முறைகள் தாமே கண்டுபிடித்து அயல்நாடுகளிலும் கியாதி பெற்றவர். ஆகவே எல்லா விவரங்களும் குறிப்பிட்டு நீண்டதொரு தந்தி அவருக்கு அனுப்பி விமான மூலம் உடனே வால்டேருக்குப் புறப்படுமாறு வேண்டிக் கொண்டு எல்லாச் செலவுக்கும் தாமே பொறுப்பாளி என்றும் வீரபத்திரன் அறிவித்தார். அதில், குழந்தை குணமடையாவிட்டால் தம் நல்ல பெயர் பாதிக்கப்படும், தம் உயிருக்கும் முடிவு ஏற்படக்கூடும் என்ற கருத்தையும் சங்கேதமாகக் குறிப்பிட்டு அவசியம் வரவேண்டும் என்று வற்புறுத்தியிருந்தார். தந்தி கிடைத்ததும் புறப்படுவது அசாத்தியமாக இருந்தால் பயன்படட்டும் என்ற எண்ணத்துடன் விவரமான கடிதமும் அவர் எழுதினார்.

மறு நாள் சபாபதி பிள்ளையும் அதற்கடுத்த நாள் டாக்டர் தாவேயும் வந்து சேர்ந்தார்கள். தந்தி கிடைத்ததுமே தாவே விசாகப்பட்டினம் ஆஸ்பத்திரி டாக்டர்களுக்குச் சில யோசனைகள் கூறி விவரமானதொரு தந்தியடித்திருந்தார்.

ஆஸ்பத்திரி டாக்டர்கள் தாமோதரிடம் மிக்க மரியாதையுடன் நடந்து கொண்

## ஒரு தமாஷ்!

''என்னய்யா பரதேசி! நான் தேர்தலுக்கு நிற்கிறேன். உமக்கு இந்த ஓட்டைத் தவிர வேறு ஏதாவது வோட்டு உண்டா?''

''கிண்டல் பண்ணாதே அப்பனே! நானும் உன்னைப் போல் ஒரு காலத்தில் தேர்தலுக்கு நின்றுதான் இந்தக் கதிக்கு ஆளானேன்!'' — ஆர். எஸ். மணி



டார்கள். அது வரை கிடைத்த தகவலெல்லாம் விவரமாய்க் கேட்டுத் தெரிந்து கொண்ட பிறகு அவர் தாம் கொண்டு வந்திருந்த உபகரணங்களாலும் மருந்துகளாலும் சில சோதனைகள் நடத்தி, ''குழந்தையைப் பம்பாயில் என் நர்சிங்ஹோமுக்கு அனுப்பினால் நல்லது. உங்கள் அநுமதி இருந்தால் இன்றே நான் விமானத்தில் இட்டுச் செல்கிறேன். பெற்றோர்கள் ரயிலில் வரலாம்; அல்லது விமானத்திலேயே வரலாம். இந்தக் கேஸ் சீக்கிரம் குணமாகும்'' என்று கூறினார். வீரபத்திரன் கணக்கு வழக்கு அப்புறம் தீர்த்துக் கொள்ளலாம் என்று சொல்லிவிட்டு — அனைவருக்கும் விமானப் பிரயாணச் சீட்டுகள் வாங்கி வந்தார்.

இரண்டு மாதங்களில் குழந்தையின் உடல் முற்றிலும் குணமடைந்தது. சொல்லப் போனால் முன்னிலும் சுகமாய் இருந்தது. அன்புடன் பணிவிடை செய்த இனிய நர்சுகளிடமிருந்து இலவசமாகச் சில மராட்டிச் சொற்களும் கற்றுக் கொண்டான்.

'வெண்ணெய் கொண்டு வா! சீக்கிரம் கொண்டு வா!' என்று தாயிடம் சொல்வதற்கு, ''ஆயீ, மஸ்கா ஆண்; லங்கர் யே'' எனத் தொடங்கினான். நன்றிக் கடனில் ஆனந்தக் கண்ணீரில் மூழ்கிய பெற்றோர் ஊர் திரும்பும் சமயம் டாக்டர் தாவேக்குத் தாம் கொடுக்க வேண்டியது என்ன என்று கேட்ட போது ''தற்சமயம் கடவுளுக்கு நன்றி! பாக்கி விவரம் நான் வீரபத்திரபிள்ளைக்கு எழுதுகிறேன்!'' என்று சொல்லி விட்டார்.

அதை அறிந்த வீரபத்திரன் இரண்டாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் டாக்டருக்கு அனுப்பி, மனப்பூர்வமாக நன்றி தெரிவித்து, இன்னும் எவ்வளவு பாக்கி என்று வினவினார். செக் குறுக்குக் கோடுகளால் ரத்து செய்யப்பட்டு நான்கு நாட்களில், ''என் பில் வந்த பிறகு பணம் அனுப்பலாம்'' என்ற சுருக்கமான குறிப்புடன் திரும்பி வந்துவிட்டது.

சபாபதி தம்பதிக்கு இது ஒன்றும் புரியவேயில்லை. சத்திய யுகத்தைப் பற்றிச் சொல்வார்களே அதை மிஞ்சியிருக்கிறதே என்று நினைத்த அவர்கள், ''நீங்கள் ஏன் பணம் அனுப்பினீர்கள், பத்திரன்? அது போகட்டும், அவர் ஏன் ஏற்க மறுத்து விட்டார்?'' என்று குழம்பிய ஆவலுடன் கேட்டார்கள்.

வீரபத்திரன், ''இதோ, வந்துவிட்டேன்'' என்று சொல்லிக் கொண்டே பக்கத்து அறைக்குச் சென்று ஒரு காகிதத்தில் நடுங்கும் கரத்தால் எழுதினார்: ''என் கசந்த மனத்தின் சாபந்தான் மீனாட்சியின் குழந்தையை நொண்டியாக்கி விட்டது என்று உலகம் பழித்தால் நான் எதிர்த்து என்ன கூறுவது? பையன் சொஸ்தமடையா விட்டால் உயிரை விட்டுவிடுவது என்று தீர்மானித்திருந்தேன். எனக்கு உயிர் வாழ்வதில் விசேஷப் பற்றுதலில்லா விட்டாலும் அந்தக் கோரச் செயலுக்கு அவசியம் ஏற்படாததில் ஒரு திருப்தி. எனக்கு ஒரு பெரிய தீங்கு விளைவித்து விட்டதாக டாக்டர் தாவே பல்லாண்டுகளாகத் தம் மீது குற்றம் சாட்டிக் கொண்டிருப்பதால், அந்தப் பளுவைச் சிறிதளவேனும் குறைத்துக் கொள்ளும் ஆசையுடன் எனக்கு—என் மூலம் உங்களுக்கு—இந்த உபகாரம் செய்திருக்கிறார் என்று நினைக்கிறேன். மேலும் விவரிக்கத் தேவையில்லை. இப்பொழுது என் விஷயம்: இரண்டாயிரம் பெரிய தொகைதான். ஆனால் என் தற்காலச் சேமிப்பு முழுவதையும், இனி என் சம்பளத்தில் மிஞ்சுவது எல்லாவற்றையும் சென்னையில் ஒரு போலியோ சிகிச்சை நிலையம் நிறுவுவதற்காகக் கொடுத்து விடுவது என்று தீர்மானித்துவிட்டேன். உயிருள்ள வரை கணிசமான பென்ஷன் எனக்குக் கிடைக்கும். சேமிப்பு எனக்கு எதற்கு? நான் இறந்துவிட்டால் உடனடிச் செலவுக்காக — கிரியைகளுக்காக அல்ல; அதை நான் எதிர்பார்க்கவில்லை — இருநூறு முந்நூறு ரூபாய் எப்பொழுதும் பெட்டியில் வைத்திருப்பேன்.... மற்றப்படி நாம் இவ்வூரிலிருக்கும் வரை முன் போல் சந்திப்போம். ஆனால் இவ்விஷயத்தைப் பற்றி நீங்கள் மறுபடியும் பேச்செடுக்காமல் இருந்தால் தயவாயிருக்கும்.'' இப்படி எழுதி அவர்கள் கையில் கொடுத்துவிட்டு ஒரு பத்திரிகையுடன் அப்பால் சென்றார்.

மீனாட்சியும் சபாபதியும் உணர்ச்சி வெள்ளத்தில் எதிர்நீச்சல் போட்டுக் கரை சேர வெகு நேரம் பிடித்தது.

## இலவசப் பிரயாணம்



ஸ்டாக் ஹோமைச் சேர்ந்த சில அரசியல்வாதிகள், பிரபல பத்திரிகைகளின் ஒத்துழைப்புடன் ஒரு விநோதமான கோரிக்கையை அரசாங்கத்துக்கு விடுத்திருக்கின்றனர். பஸ், டிராம், பாதாள ரயில் இவைகளில் இலவசப் பிரயாணத் திட்டத்தைக் கொண்டு வர வேண்டும் என்பதுதான் அது. எப்படிச் சாத்தியம் என்பதற்கும் அவர்கள் பதில் கூறுகிறார்கள். இலவசப் பிரயாணத்துக்கு வசதி செய்து விட்டால் கண்டக்டர்கள், டிக்கட் அலுவலகம், பணம் வசூலிக்கும் ஊழியர்கள், போன்ற பலப்பலரது சேவை தேவையில்லையல்லவா? இந்த வருமானத்துக்கும் அந்தச் செலவுக்கும் சரியாகி விடுமாம்!

— ஆர். எஸ். மணி

கதகதப்புடன் துயில கனமான
போர்வை இனி அவசியமில்லை...

இதோ

சூப்பர் **வாட்டெக்ஸ்**

# பிளாங்கெட்

வந்துவிட்டது!

இலேசானது,

இறக்குமதி செய்த

## 100% அக்ரிலிக் ஃபைபர்

கொண்டு தயாரிக்கப்பட்டது

பாம்பே டையிங் அளிக்கும் புதிய சூப்பர் 'வாட்டெக்ஸ்' பிளாங்கெட் அதன் வகையில் இந்தியாவில் முதன் முதலாகத் தயாரிக்கப்படுவதாகும். இந்த இலேசான போர்வை மிகக்கனமான போர்வையைவிட அதிக கதகதப்பை அளிக்கிறது. சூப்பர் 'வாட்டெக்ஸ்' பிளாங்கெட் இறக்குமதி செய்யப்பட்ட 100% 'அக்ரிலிக் ஃபைபர்' கொண்டு லாண்டார் (ரெஜிஸ்டர்டு) முறையில் தயாரிக்கப்பட்டது. முற்றிலும் இலேசானது, அதிக மிருதுவானது, அதிக கதகதப்பை அளிப்பது என்பதோடு இது பூச்சிகளால் அரிக்கப்படாதது. சுருங்கிவிடாது. வீட்டிலேயே வசதியாக துவைத்துக் கொள்ளலாம். பலவித நிறங்களில் கிடைக்கிறது. சூப்பர் 'வாட்டெக்ஸ்' பிளாங்கெட் உபயோகத்திலில்லாத போது மடித்து வைப்பதற்கு வசதியான பிளாஸ்டிக் உறையுடன் அளிக்கப் படுவதால் அதை நீங்கள் விரும்பி வரவேற்பீர்கள்.

சூப்பர் **வாட்டெக்ஸ்** பிளாங்கெட் —
பாம்பே டையிங் மட்டும் தயாரிக்கும் இணையற்ற போர்வை

# பாம்பே டையிங்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: மெஸ்ஸர்ஸ் கிஷின்சந்த் செல்லாராம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட், 3/4, கிடங்கு தெரு, மதராஸ்-1

JWT-BD-5118R

# ஸிம்லாவில் ஒரு கருத்தரங்கு

## க.நா.சுப்ரமண்யம்

முன் காலத்திலெல்லாம் புண்ணியம் தேடிக் காசி, ராமேசுவரம் என்று பிரயாணம் போவார்கள். இந்தக் காலத்தில் அந்தக் கருத்தரங்கு, இந்த விழா என்று பல இடங்களுக்குப் போவதற்கும் அவசியம் ஏற்படுகிறது. இலக்கியகர்த்தாக்களாவது இந்தியாவின் பல்வேறு பிரதேசங்களில் வாழ்ந்து, அங்கெல்லாம் மக்கள் என்ன மாதிரி வாழ்கிறார்கள், நமது சரித்திர, கலாசார பாரம்பரியம் எப்படியெல்லாம் அவர்களை உருவாக்கியிருக்கிறது என்று அறிந்துகொள்ள வேண்டியது அவசியம் என்று நான் எண்ணுகிறேன். அதுவும் தவிர, பல்வேறு இடங்களில் நடக்கிற கருத்தரங்குகளினால் இலக்கியத்துக்கு அவ்வளவாக லாபம் ஒன்றும் இல்லையென்றாலும், ஒரு லாபம் நிச்சயம் உண்டு. இந்தியாவில் பல்வேறு மொழிகளிலும் எழுதுபவர்கள் பொதுவாகவே கிணற்றுத் தவளைகளாகவேதான் இருக்கின்றனர். அடிக்கடி கருத்தரங்குகளுக்குச் சென்று வருகிற எழுத்தாளனுக்குப் பிறமொழிகளில் எழுத்தாளர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள், எப்படிச் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ள ஒரு வாய்ப்புக் கிடைக்கிறது. புது நட்புறவுகளையும் ஏற்படுத்திக் கொள்ள இயலுகிறது.

எனக்கும் சர்க்கார் இலாகாக்களுக்கும் அவ்வளவாகப் பொருத்தம் கிடையாது. இலக்கியத் துறைகளில் சர்க்காரும், சர்வ கலாசாலைகளும் சரிவரப் பங்கு பெற முடியும் என்பதிலும் எனக்கு நம்பிக்கை கிடையாது. உதாரணமாகச் சர்க்கார் சம்பந்தப்படாதிருந்தால், விஞ்ஞானம், கலை முதலிய எல்லாத் துறைகளிலுமே தமிழ் மிகவும் நன்றாக வளர்ந்திருக்கும் என்றே நான் நம்புகிறேன். சர்க்கார் தமிழை வளரச் செய்யக் கங்கணம் கட்டிக் கொண்டு பலருக்கும் சம்பளம் தர முன்வர முன்வர, தமிழ் அறிவு பின்னடைகிறது என்பது நாம் கண்கூடாகக் காண்கிற விஷயமாகும். இதே போல் இந்திய சர்க்காரின் தயவினால் ஹிந்தி இந்தியாவில் வெகுவாகப் பின்னடைந்த மொழியாகவே இருக்கிறது என்பது ஏற்றுக்கொள்ளப்பட வேண்டிய விஷயமாகும். இந்த விஷயத்தில் இந்தி எதிர்ப்பு நண்பர்கள் நமது சர்க்காருக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். முப்பது ஆண்டுகளில் 1930 முதல் இன்றுவரை ஒரு மொழி என்கிற அளவில் இந்தி சாதாரணமாக அடைந்திருக்கக் கூடிய வளர்ச்சியை அடைந்திராதிருப்பதற்குச் சர்க்காரின் இந்தி ஆதரவுக் கொள்கைதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.

இந்தச் சிந்தனைக்கெல்லாம் காரணம் (Indian Institute of Advanced Study) என்கிற ஒரு சர்க்கார் கல்வி இலாகா ஸ்தாபனம் என்னை ஒரு பதினைந்து நான் கருத்தரங்கில் கலந்து கொள்ள அழைத்ததுதான். ஸிம்லாவில் அக்டோபர் 2 முதல் 15-ஆம் தேதி வரையில் கருத்தரங்கு. விஷயம் — இந்திய இலக்கியத்தில் புதுமை.

நான் என் சக கருத்தரங்குக்காரர்களுக்கு என்று தயார் செய்த கட்டுரையின் தலைப்பு ''தமிழ் இலக்கியத்தில் 2000 ஆண்டுப் புதுமைகள்'' என்பதாகும். கட்டுரையை உரிய காலத்தில் (ஒரு வாரம் மட்டுமே தாமதமாக) அனுப்பிவிட்டுக் கிளம்பினேன்.

செப்டம்பர் 11 அன்று எர்ணாகுளத்திலிருந்த நான் செப்டம்பர் 27ந் தேதி ஸிம்லாவுக்குக் கிளம்பியபோது இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிக்குப் போகிறோம் என்கிற பெருமையுடனேயே கிளம்பினேன். எத்தனை பரந்த தேசம் இது, எவ்வளவு வித்தியாசப்பட்ட மக்கள், எவ்வளவு மாறுபட்ட பிரதேசங்களில் வசிக்கிறார்கள் என்பதை நினைத்துக் கொண்டே கிளம்பினேன். இரயிலில் என்னுடன் வந்த வயதான ஒருவர் (நானே வயதானவன்தான்) அயோத்திக்கு, ராமர் பிறந்த மண்ணில் போய் ஒரு மாதமாவது இருந்துவிட்டு வரவேண்டும் என்று கிளம்பியுள்ளதாக விசாரித்து அறிந்து கொண்டதும், இலக்கிய யாத்திரை அவ்வளவு ஒன்றும் புதுமையான விஷயம் அல்ல என்று எனக்குத் தோன்றிற்று. எனக்கும்கூட அயோத்தி போக ஆசைதான். — அங்கு யாராவது கருத்தரங்கு கூட்டுகிறார்களா, பார்க்கலாம்!

முதலில் 'இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் அட்வான்ஸ்ட் ஸ்டடி' என்கிற ஸ்தாபனம் பற்றிய சில தகவல்களை எனக்காகச் சேகரித்துக் கொண்டேன். அமெரிக்காவில் பிரின்ஸ்டனில் இப்படி ஒரு ஸ்தாபனம் இருக்கிறதாமே — அதே போல விஞ்ஞானம் தவிர மற்ற துறைகளில் பணி செய்யப் பிறந்த ஸ்தாபனமாம் இது. நம் ஊர்களில் வேர் விட்ட ஸ்தாபனங்களோ, இலக்கியமோ, அறிவுத் துறைகளோ, விமரிசனமோ மிகக் குறைவு. — அது எதுவானாலும் அமெரிக்கா அல்லது ருஷ்யா போன்ற ஏதாவது ஒரு நாட்டில் உள்ளது போல இருந்தால்தான் நமக்குப் பெருமை! கும்பகோணத்தின் உதவியால் சென்னை ஜீவித்திருப்பது போக, சென்னைக்கு மொஃபஸலில் ஆகிவிட்ட பெருமை கும்பகோணத்துக்கு அல்லது மதுரை திருச்சி போன்ற வேறு ஏதோ ஊருக்கு ஏற்பட்டு விட்டது. அது போல் சென்னை, கல்கத்தா, பம்பாய், டில்லி போன்ற நகரங்கள் இன்று கலை, விஞ்ஞானம் எல்லாத் துறைகளிலுமே நியூயார்க், மாஸ்கோ, பாரிஸ், சில சமயம் லண்டன் போன்ற நகரங்களுக்குச் சுற்று வட்டாரங்களாகி விட்டன (Suburbs) என்று மலையாள நண்பர் ஒருவர் (எம்.

கோவிந்தன்) சொல்லுவார். அதே போல நமது இலக்கிய அறிவெல்லாம் கூட ஏதோ கடனாக நாம் வாங்கிக் கொண்டது போல் இருக்கிறது.

இந்த ஸ்தாபனம் வருஷத்தில் நாலைந்து முறைகளாவது கருத்தரங்குக் கூட்டங்கள் கூட்டுகிறது என்றும், மத சம்பந்தமான பழக்க வழக்கங்கள் பற்றியும், கலை (சங்கீதம், ஓவியம் முதலியன) பற்றியும் சீக்கியர்கள் பற்றியும், இதற்கு முன் நான்கு கருத்தரங்குகள் நடந்ததாகவும், இது அந்த ஓராண்டில் ஐந்தாவது கருத்தரங்கு என்றும் அறிந்து கொண்டேன். இந்த ஸ்தாபனம் ஏற்பட்டே ஓர் ஆண்டுதான் ஆகிறது. ஸ்தாபனத்தின் தலைவர் டாக்டர் நிஹார் ரஞ்சன் ராய் என்பவர், கலை சரித்திரம், இவற்றில் ஆராய்ச்சி நிபுணர். வங்கமொழியில் பிரபலமான ஓர் இலக்கிய விமரிசகர். அவர் பேசுகிறபோது சாதாரணமாகவே பல துறைகள் பற்றிய சிந்தனைகள் — மனோதத்துவம், சரித்திரம், கலை, இலக்கியம், சமூகவியல் முதலியவை பற்றிய சிந்தனைகள் தாராளமாக உதிருகின்றன. அவர் இந்த ஸ்தாபனத்துக்காக உருவானவரா அல்லது இந்த ஸ்தாபனமே இப்படிப்பட்ட ஓர் அறிஞருக்காக உருவானதா என்று சொல்வது சற்றுச் சிரமமான விஷயம் என்றுதான் தோன்றுகிறது. கருத்தரங்கு முடிந்து பிரிவுபசாரத்தின்போது பேசுகையில் அவர் இந்த ஸ்தாபனத்தில் ஓர் ஆண்டில் குறைந்தபக்ஷம் இருநூறு அறிஞர்களாவது வந்து கூடும்படி செய்ய வேண்டும் என்று தாம் நினைத்ததாகவும், அதை முதல் ஆண்டிலேயே நிறைவேற்றிவிட்டதாகவும் கூறினார்.

ஸ்தாபனம் அமைந்திருக்கிற இடம் ஸிம்லாவில் வைஸ்ராய்களின் மாளிகையாக இருந்து, இப்போது ராஷ்டிரபதி நிவாஸ் என்கிற பெயரால் அழைக்கப்படுகிறது. ராஷ்டிரபதி ராதாகிருஷ்ணன் அவர்கள் தமக்குச் சொந்தமான இந்த மாளிகையை இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆப் அட்வான்ஸ்ட் ஸ்டடீஸ் என்ற ஸ்தாபனத்துக்குத் தானமாக அளித்து விட்டார். அதனால்தான் இந்த ஸ்தாபனம் ஸிம்லாவில் உருவாகியிருக்கிறது. ஸிம்லாவில் இருப்பதிலே சில சௌகரியங்களும் உண்டு — அசௌகரியங்களும் உண்டு. டாக்டர் பட்டம் பெற்ற பின் ஆராய்ச்சிக்கு வசதி செய்து தருகிற இந்த ஸ்தாபனத்தில் போதுமான அளவு வாசகசாலை, புஸ்தகங்கள் இல்லை; உபயோகித்துக் கொள்ளும்படியாகச் சர்வ கலாசாலை அல்லது பொது லைப்ரரி எதுவும் அருகில் இல்லாதது ஒரு பெரிய குறை. இருந்தும் ஓராண்டுக்குள் பல சரித்திர, கலை, தத்துவ, மத நூல்கள் இந்த ஸ்தாபனத்தின் லைப்ரரியில் சேர்க்கப்பட்டுள்ளன. நல்ல லைப்ரரி உருவாகப் பணம், காலம் என்பதுடன் ஈடுபாடுள்ள ஒரு தலைவரும் தேவை; ராய் அவர்களின் தலைமையில் காலக்கிரமத்தில் பணம் போதுமானது உண்டானால், லைப்ரரி சேர்ந்துவிடும். ஆராய்ச்சிகள் செய்வோர் ஆராய்ச்சிகளைத் தவிர, வேறு எதிலும் மனம் செலுத்துவது என்பது ஸிம்லாவில் சாத்தியமில்லை. கார், வாகன வசதிகள் குறைவு; எங்கு போக வேண்டுமானாலும் சாதாரணமாக நடக்க வேண்டும்; நடப்பதற்கு உற்சாகம் தரும் சீதோஷ்ண நிலை ஸிம்லாவில் இருக்கிறது. மற்றபடி ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சியில் தவிர வேறு எதி



ஸிம்லாவில் கருத்தரங்கைத் தொடங்கி வைத்த டாக்டர் நிஹார் ரஞ்சன் ராய் பேசுகிறார். எதிரே கருத்தரங்கில் பங்கு பற்றியவர்களில் ஒரு பகுதி.

ரம் ஈடுபட்டு, பொழுதை வீணாக்கி விட முடியாது.

புதுமை இலக்கியம் பற்றிய கருத்தரங்கில் பொதுவாகப் பேசப்பட்ட விஷயங்களிலிருந்து தெளிவானவை பல முடிவுகள்: 1) இந்தியாவில் புதுமை, மரபு என்கிற இரண்டு தத்துவங்களையும் வார்த்தைகளையும் எல்லோரும் ஒரே அர்த்தத்தில் உபயோகிப்பதில்லை; (2) புதுமை என்பதைக் காலத்தால் நமக்குச் சமமானது என்று கணித்துக் கொள்வதே சரியானது; (3) இந்தப் புதுமையில் பெரும் பகுதியும் நமது மேலை நாட்டு இலக்கியப் பரிச்சயத்தால் ஏற்பட்டது; ஒரு பகுதி இந்தியப் பழைமை பற்றிய புது நோக்கினால் ஏற்பட்டது. (4) இலக்கிய சிருஷ்டிக்கு வேண்டிய அளவுக்கு நமக்கு வாழ்க்கை அநுபவம் இருக்கிறது. மேலை நாட்டை நாம் நமது புதுமை இலக்கியத்துக்காக நம்பியிருக்க வேண்டியதில்லை. (5) எனினும் சமீப காலம் வரையில் இந்தியப் புதுமை இலக்கியம் மேலை நாட்டை அடியொற்றிப் பிரதி எடுப்பதாகவே இருக்கிறது. (6) இது நல்லதல்ல. (7) விமர்சன நோக்கையும் சரித்திர நோக்கையும் வளர்த்துக் கொள்வதே நாம் புதுமை இலக்கிய முன்னேற்றம் காணச் செய்யக்கூடிய காரியம். (8) சமுதாய, தத்துவப் பிரச்னைகள் நமது இலக்கியங்களில் நம்மளவில் பிரதிபலிக்கப்படுகின்றன என்பதுடன் (9) புதுமையின் ஓர் அம்சமாகக் கேலி, (Satire) அங்கதம் (Irony) இரண்டும் வளர்ந்துள்ளன.

இரண்டாவது பகுதியில் தெளிவான விஷயங்கள் பின்வருவனவாகும். (1) இன்று இந்திய மொழிகள் எல்லாவற்றிலுமே சிறுகதை, கவிதை, நாவல், நாடகம், விமரிசனம் இந்தத் துறைகள் இந்த வரிசையில் பிரதானமாக இருக்கின்றன. (2) கவிதையில் டி.எஸ். எலியட், விமரிசனத்தில் எலியட், எஸ்ரா பவுண்ட், லீவிஸ், ரிச்சார்ட்ஸ் போன்றவர்களின் ஆதிக்கத்தில் தொடங்கியே இந்திய இலக்கியங்கள் பலவற்றிலும் புதுமை வளர்ந்து விடுதலை பெற்றிருக்கிறது. (3) நாவல்களில் (existentialism) என்கிற தத்துவம் ஜெயினேந்திர குமாரில் தொடங்கி, அக்யேயாவின் புது நாவல் வரையில் இந்தியாவில் வியாபித்திருக்கிறது. (4) உருதுவிலும் தமிழிலும் கவிகள் சற்று அதிகம் (எண்ணிக்கை அளவில்) (5) ஹிந்தியில் அற்புதமான நவகவிதை உதயமாகி உருப்பெற்றிருக்கிறது. (6) மரபு மீறாத அளவில் கவிதை தமிழிலும், உருதுவிலும் சிறப்புப் பெற்றிருக்கிறது. (7) வங்கத்தில் தாகூர் இறக்கும் வரையில் புதுமைக் கவியாகவே இருந்தார். (8) புதுக் கவிதைக்கும் சிறுகதைக்கும் நாவல்களுக்குமே போதுமான அளவில் மொழிபெயர்ப்புகள் கிடைப்பது சிரமமாக இருக்கிறது. (9) வங்கத்தில் புதுக் கவிதை முயற்சிகள் இருபதுக்களிலும், பிற மொழிகள் பலவற்றிலும் நாற்பதுக்களிலும், தமிழில் ஐம்பதுக்களிலும் தொடங்கியது. (10) எல்லா இந்திய மொழிகளிலுமே தங்கள் நவீன சிருஷ்டிகளை விமரிசன நோக்குடன் பார்க்கும் வழக்கம் ஏற்பட்டு விடவில்லை. (11) மலையாளத்திலும் வங்காளியிலும் தவிர மற்ற மொழிகளில் நாடகம் அவ்வளவாகப் புதுமை பெறவில்லை. (12) மராட்டியில் மார்க்ஸீய விமரிசனப் பார்வை ஒரு புதுமையை ஏற்படுத்தியது....என்பது போன்ற பல விஷயங்கள் தெளிவாயின. அர்த்த புஷ்டியுடன் ஒவ்வொருவரும் பேசியது குறித்துச் சொல்லப் போனால் கட்டுரை நீண்டுபோகும்.

பொதுவாக இந்தக் கருத்தரங்கில் இந்திய இலக்கியத்தின் ஒருமை நன்கு தெளிவாகியது. சில்லறை அம்சங்களில் வித்தியாசப்பட்டாலும் கூட, அடிப்படையில், சமூக சீர்திருத்தத்தில் தொடங்கிப் புது தத்துவ, இந்திய மரபு தரிசனத்தில் இந்திய இலக்கியங்கள் எல்லாம் புதுமை கண்டன என்பது தெளிவாகியது. இன்றுள்ள மனிதனுக்குரியது என்று சொல்லக் கூடிய பகுதிகளையே இந்திய இலக்கிய மரபில் நாம் ஏற்றுக் கொள்ள இயலும் என்பது பொதுப்படையாக அங்கு கூடியிருந்தவர்கள் பெரும்பாலோரின் அபிப்பிராயமாகும்.



ஸிம்லாவில் நடந்த கருத்தரங்கு தொடக்க நாளில் கவர்னர் தர்ம வீரா பார்வையாளர் புத்தகத்தில் கையெழுத்திடுகிறார்.

அக்டோபர் மாதத்தில் ஸிம்லா அதிகக் குளிர் இல்லாமல் மிகவும் உல்லாசமாக இருந்தது. சற்றேறக்குறைய நூறு பேருக்கு அழைப்பு அனுப்பியதாகவும் அதில் 40 பேர் வழிகளே வந்தார்கள் என்றும் டாக்டர் ராய் சொன்னார். ஆரம்பத்திலிருந்த நாற்பது பேரில் ஒரு பத்துப் பன்னிரண்டு பேர் திரும்பிப் போன பிறகுதான் கருத்தரங்கு களை கட்டியது என்பது இந்த மாதிரிக் கருத்தரங்குகளில் ஒரு நெருக்க பாவம் உண்டாக வேண்டுமானால் அதிகமாகப் போனால் இருபது இருபத்தைந்து பேருக்கு மேல் பங்கு பெறக் கூடாது என்பதையே வற்புறுத்தும். ராஷ்டிரபதி நிவாஸில் தங்குவதற்கும் இடம் தந்




BENSONS2/JEN.49C

# ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ்

## எண்ணெய் கலந்த டிஸ்டெம்பரைப் போல விலை குறைவு. இருந்தாலும் நன்ருக கழுவக்கூடிய, அதிக கவர்ச்சியான நிலைத்து நிற்கும் மெருகு.

இதற்கு முன் உண்மையான பிளாஸ்டிக் அலங்கார பினிஷ் எதுவும் இவ்வளவு குறைந்த விலைக்கு இவ்வளவு அதிகம் கிடைத்ததில்லை

இது மட்டுமல்ல, ஜென்ஸோலின் வால் பினிஷ் பிளாஸ்டிக் பொருள் உள்ளது — கவர்ச்சிகரமான, நிலைத்து நிற்கும் மெருகு தருகிறது. நன்ருக கழுவி சுத்தம் செய்யக்கூடியது; சுலபமாகப் பூசலாம், விரைவில் காய்கிறது, பிரஷ் சுவடே தெரியாது.

ஜென்ஸோலின் பிளாஸ்டிக் வால் பினிஷ் 15 அழகிய வண்ணங்களில் — பக்கத்து பெயிண்ட் கடையில் இப போது கிடைக்கிறது. எளிய செலவுக்குத் தகுந்தபடி சவுகரியமான விலை. இந்தப் புரட்சிகரமான பிளாஸ் டிக பினிஷைக் கொண்டு உங்கள் சுவர்களை அலங்கரி யுங்கள் — வியப்பூட்டும் தரம், வியப்பூட்டும் விலை !




*தயாரிப்பு :*

**ஜென்ஸன் & நிகல்ஸன்** சிறப்பாக விற்பனையாகும் ரோபியாலாக் தயாரிப்பாளர்
ஜென்ஸன் & நிகல்ஸன் (இந்தியா) லிட். 7, அரண்மனைக்காரத் தெரு, சென்னை
7/219, அவனுசி ரோடு, கோயம்புத்தூர்

இருந்தார்கள். பெரிய பெரிய அறைகள்—எழுத்தாளர்கள் நெருங்கிப் பழகிக்கொள்ளாத வகையில் வசதிகள் கொண்ட அறைகள் (நான் தங்கியிருந்த அறை லேடி வெல்லிங்டன் அந்தக் காலத்தில் தங்கியிருந்த அறையாம்). இந்தியப் பிரிவினை கையெழுத்தாகிய இடம் என்று ஓர் அறையைச் சொன்னார்கள். அது நல்லவேளையாக யாருக்கும் தரப்படவில்லை. ஒரு நூறு பேர் அசௌகரியமில்லாமல் தங்கக்கூடிய மாளிகை அது. ஆனால் போதுமான வேலைக்காரர்கள் இல்லாததால் ஓரளவுக்கு ஹோவென்று இருந்தது.

பச்சன் என்கிற இந்திக் கவி, இரண்டாவது பகுதியின் தொடக்கத்தில் இந்தியில் பேசுவேன் என்று தொடங்கியபோது ஓரளவுக்குச் சிரமமாக இருந்தது. ஆங்கில மொழி பெயர்ப்பும் தரப்பட்டிருக்கவே, இரண்டாவது பகுதிக்குத் தலைமை தாங்கிய டாக்டர் கோபால் ரெட்டி பத்து நிமிஷங்களுக்குப் பிறகு, ''பாக்கியை ஆங்கிலத்திலேயே படியுங்களேன்'' என்று சொல்லியும் பச்சன் மறுத்து விட்டார். நல்ல வேளையாக மற்றவர்கள் அவரவர்கள் மொழியில்தான் படிப்பேன் என்று தொடங்கவில்லை. தொடங்கியிருந்தால் கருத்தரங்கில் சொல்லிக் கொண்ட கருத்து ஒன்றும் யாருக்கும் புரிந்திராது. (கடைசி நாளன்று தம் கட்டுரையை வாசித்த டாக்டர் ஜியார்ஜ் இரண்டு நிமிஷம் மலையாளத்தில் பேசிவிட்டுப் பிறகு தம் கட்டுரையை ஆங்கிலத்தில் படித்தார்.) இந்தி எதிர்ப்பு சம்பந்தமாகக் காலை மாலை உணவு நேரங்களில் பலரும் பேசுவது சகஜமாக இருந்தது. இந்தப் பேச்சு டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜியின் வரவுக்குப் பின் அதிகமாயிற்று. டாக்டர் ஒருகாலத்தில் இந்தியைப் பெரிதும் ஆதரித்தவர். இப்போது அவர் இந்தியை எதிர்ப்பதுடன், ஆங்கிலமே இந்திய மொழிகளில் ஒன்றாக நம்மை இணைக்கும் மொழியாக இருக்க வேண்டும் என்று பல தடவை பலரிடமும் வற்புறுத்தியதுடன், தம் பேச்சுக்களின் தொடக்கவுரையிலும் குறிப்பிட்டார். அவருடைய ஆராய்ச்சியின் விளைவான ஆறு பிரசங்கங்களும் கருத்துச் செறிவு மிக்கதாய், அழகாக இருந்தன.

மாலை வேளையில் புதுமை பற்றிய விஷயத்துக்கு அதிகமாகச் சம்பந்தமில்லாத பிரசங்கங்கள் பலவும் நிகழ்ந்தன. இரண்டாவது வாரத்தில் நடந்த ஆறு மாலைப் பிரசங்கங்களும் டாக்டர் சுநீதி குமார் சட்டர்ஜியுடையவை. இந்தோ – ஐரோப்பிய நாகரிகமும் பால்டிக் நாடுகளும் என்பது பற்றிப் பேசினார். சுவாரசியமாக அமைந்தது. டாக்டர் சட்டர்ஜியுடன் பேசிக் கொண்டிருப்பதே ஒரு தனி சர்வகலாசாலைப் படிப்புப் போலப் பயன் தரத்தக்கது என்று சொன்னால் அது மிகையாகாது. எத்தனை விஷயங்களை எத்தனை லாகவமாகப் பிட்டுப் பிட்டுச் சொல்லுகிறார் அவர்! அவர் சொல்வதை நாம் கேட்க வேண்டும் என்று நினைப்பது போலவே அவரும் நிதானமாக நிறுத்தி நின்று நாம் சொல்வதையும் சிரத்தையுடன் கேட்டுக் கொள்







கிறார். அதை நினைவில் வைத்துக் கொண்டிருந்து எங்கேயாவது உபயோகிப்பார். தவறாக எதையும் சொல்லிவிடக் கூடாது என்று நமக்கே ஒரு சிரத்தை தோன்றும்படியாக அவர் நம் பேச்சைக் கேட்டுக் கொள்கிறார்.

பழைய நண்பர்கள் பலரைச் சந்தித்ததுடன், புது நண்பர்கள் பலரையும் நான் இந்தக் கருத்தரங்கில் கண்டு கொண்டேன். அவர்களில் சற்றுச் சிறப்பாக தேபான ராஜு ஒருவரைச் சொல்ல வேண்டும். சிம்லாவிலிருந்து நாலைந்து மைல் தூரத்தில் ஷைப்ரா குன்றில் வசிக்கும் இவர் நேப்பாளக் கவி, விமரிசகர்; சம்ஸ்கிருதப் பழமையையும், புதுமை வேகத்தையும் பெற்றவர் இவர். இனிமையான சுபாவமுடைய இவர், எங்களில் சிலருக்கு அளித்த விருந்து மிகவும் சிறப்பாக இருந்தது. ஆப்பிள் தோட்டம் போட்டுப் பொருளீட்டுகிறார் இவர்.

**ரா**ய்மல் எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளத் தெரியாமல் போட்டு உடைத்துக் கொண்டிருந்தான்: ராணா, பேச்சை மாற்ற நினைத்து, "என்ன மீரா, மாளிகை சௌகரியமாக இருக்கிறதல்லவா? ராய்மல், சித்தியின் வீட்டைச் சுற்றிப் பார்ப்போமே!" என்று கூறியபடி உள்ளே நடந்தான்.

"அதற்குள் உள்ளே நடக்கிறீர்களே, அப்பா? இங்கேயே சரி செய்ய வேண்டியதை முதலில் கவனியுங்கள்" என்றான் ராய்மல்.

கண்ணனை அம்பலப்படுத்தியே ஆகவேண்டும். ஏனப்பா, விழிக்கிறீர்கள்? ஏன் சித்தி நடுங்குகிறீர்கள்? ஒரு பேரம்பலத்தைக் கட்டி அதில் இவனைப் பிரதிஷ்டை செய்ய வேண்டுமென்கிறேன்" என்று சிரித்தான் ராய்மல்.

ராணா, மீரா இருவரும் கலகலவெனச் சிரித்து விட்டனர். மீராவின் உள்மனத்திலிருந்த ஆசையை வெளியிட்டுவிட்ட ராய்மல் தேவதூதனாகவே அவளது கண்களில் தோன்றினான்.




"ஏன், இங்கே என்ன சரி செய்ய வேண்டும்?" என்று கேட்டான் ராணா.

"நல்ல கேள்வி கேட்டீர்கள். இந்தப் பேடகத்தை முதலில் திறக்க வேண்டும். நீங்கள் வந்தவுடன் சித்தி அதை மூடிவிட்டார். மகாராணாவுக்குத் தெரியாமல் அரண்மனைக்குள்ளேயே இரகசிய நடவடிக்கைக்கு இடம் தரலாமோ? அதனால் முதலில் இந்தப் பேடகத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் கிருஷ்ணனை அம்பலப்படுத்த வேண்டும். ஆதியில் கோபிகைகளுக்குப் பயந்தது போதாதென்று இப்போது பாட்டிக்குப் பயந்து பதுங்கிக் கொண்டிருக்கும்

"மீரா, ராய்மல் சொல்லுவதை நிச்சயம் நான் கேட்டாகவேண்டும். கூடிய சீக்கிரமே இந்தக் கண்ணன் அற்புதமான ஆலயத்தில் அமர்ந்து விடுவான்" என்றான் ராணா.

மீராவின் இதயம் துள்ளிக் குதித்தது. அவளது முகமும் மலர்ந்தது.

"சித்தி, நாங்கள் வரும்போது நீங்கள் கண்ணீரில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தீர்கள். இப்போது ஆனந்தத்தில் ஒரு பாட்டை மலர்த்துங்களேன்" என்று கூறியபடி பேடகத்தைத் திறந்தான் ராய்மல்.

கிரிதரன் பிரசன்னமாக தரிசனம் தந்தான்.



மீரா பேரானந்தத்துடன் பாடினாள்:

அந்தமில் அழக, நந்தலால,
கண்ணில் வசிக்கவா, கண்ண பால!
மோகன மூர்த்தி
சியாமள சீர்த்தி
நயனம்மிரி நேர்த்தி

மயிற்பீலி மங்கலம்
மகரமீன் குண்டலம்
திலகமொளிர் முகமண்டலம்

அமுதம்பொழி அதரம்
அதில்குழல் இன் கரம்
வைஜயந்தி வாழும் உரம்

உயிரைக் கவர் உதரம்
அதில் கிண்கிணி மதுரம்
கழலிசைக்கும் நூபுரம்

மீரா இதய பூபாலன்
அன்பர்க்கினிய க்ருபாலன்
அடியார்க்கருள் கோபாலன்

ஆனந்தப் பொழிவிலிருந்து வழிந்த பிரவாகமாக மீரா தூர்கா ராகத்தில் தன்னை மறந்து பாடினாள். நேற்று தனியாய்த் தவித்து, அடியாய்த் துடித்த மீரா இன்று இன்பப் பரவசத்தில் இன்னிசை எழுப்புவதைக் காணக் காணக் கும்பனுக்கு எல்லையில்லாத நிம்மதியும், திருப்தியும், சாந்தியும் உண்டாயின. ராய்மல் எவ்வளவு அறிவுக் கூர்மையும், அநுதாப மனமும் கொண்டவன்? எவ்வளவு லாகவமாக மீராவின் உள்ளத்தைப் புரிந்து கொண்டு விட்டான்?

மகாலே மூவரும் சுற்றிப் பார்த்தனர்.

"இதென்ன அறை?" என்று கேட்டபடி ஒரு கதவைத் திறந்தான் ராய்மல்.

ஒற்றைத் தந்தக் கட்டில் போட்டு, அதில் பஞ்சணை விரித்திருந்தது.

தயக்கம் நிறைந்த கண்களுடன் ராணாவை நோக்கினாள் மீரா. அங்கீகாரம் நிறைந்த புன்னகையுடன் மீராவை நோக்கினான் ராணா.

ராய்மல்லின் உள் மனத்தில் அதன் அர்த்தம் வெகு வெகு இலேசாக நிழலாடியது.

மீராவின் மாளிகையிலிருந்து திரும்புகையில் கும்பராணா ஏதுமே பேசவில்லை.

"அப்பா, ராஜ்யபாரத்தை என் தலையில் சுமத்துவது பற்றிச் சொன்னீர்கள். அதை விட உங்களது இதயபாரத்தைத் தாங்கிக் கொள்ளத்தான் ஆசைப்படுகிறேன்!" என்று பேச்சைத் தொடங்கினான் ராய்மல்.

ராணா மகனைப் பரிதாபமாகப் பார்த்தான். சட்டென்று சிலும்பிச் சிரித்தான். சிரிப்புத்தானா அது? விம்மலுக்கும் சிரிப்புக்கும் இடை நிலையில் ஏதோ ஒன்று அது!

ராணா எதுவும் சொல்லாமலே ராய்மல் சகலத்தையும் புரிந்து கொண்டு விட்டான்.

## அத்தியாயம் 18

# 'என்னைத் தொடாதே!'

மாலை வேளை நெருங்கியது.

அலைபாயும் மனத்துடன் ராணா தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான்.

'அன்னைக்கும் தங்கைக்கும் பிறாது இல்லற வாழ்வைக் கண்டாலே கடுப்பாயிருக்கிறது' என்று ராய்மல் சொன்னது உண்மைதான். என்றாலும் மீராவிடம் ஏதாவது குற்றம் கண்டுபிடிக்கக் காத்துக் கொண்டிருப்பதால் அவர்கள் அவனது ஏகாந்தத்தையும் நிந்திக்கத்தான் செய்வார்கள். அவர்களை ஏன் இழுக்க வேண்டும்? நானும் ஒரு மனிதன்தான். ஏமாற்றமும் தோல்வியும் எனக்குத் தாங்க முடியாத உணர்ச்சிகள் தாம். 'இத்தனை வயசுக்குப் பெண்ணெடுத்தாயே! உன் ஆசை பூர்த்தியாகாமல் அபஜயம் அடைந்தாய் அல்லவா?' என்று விதி தேவதை சொல்லாமல் சொல்லிப் பெருமைப் படுமாறு ஆயிற்றே.....'

தூரத்திலிருந்து பிராம்மணோத்தமர்கள் ராத்ரீ ஸூக்தம் என்ற வேத மந்திரங்களைக் கோஷிப்பது காதில் விழுந்தது. கும்பனுக்கு முன் தலைமுறைகளில் ராஜஸ்தானத்தில் வேத நாதமே குறைந்து விட்டது. வீரக் கவிதைகளையே ராஜஸ்தானியர் விரும்பியதால் பிராம்மணர்களும் அத்தியயனத்தை விட்டுக் கவிபாடத் தொடங்கி விட்டனர்; அல்லது சேனையில் சேர்ந்து விட்டனர். கும்பனின் தந்தையான மோகல்சிங் மகாராணாதான் தர்மத்தின் ஆணிவேரான வேதம் க்ஷீணிப்ப

இன் ஆபத்தை உணர்ந்தார். சித்தோரில் மீண்டும் வேத பாடசாலைகளை நிர்மாணித்தார். வேதமோதுபவர்களுக்கும், ஓதுவிப்பவர்களுக்கும் ஏராளமாக மானியங்கள் வழங்கினார். இதன்பின் மீண்டும் மேவாரில் வேத சப்தம் ஒங்கியது. மோகல் சிங் நிறுவிய பாடசாலை ஒன்றிலிருந்துதான் இப்போது ராத்ரீ ஸுக்த மந்திரங்கள் பரவிப் பொலிந்தன.

அந்தணோத்தமர்கள் இரவை வரவேற்கின்றனர். மகாராணா கும்பனுக்கோ எப்பாடுபட்டேனும் நிசிக் கன்னியை நெருங்காமல் பிடித்துத் தள்ள வேண்டும் போலிருந்தது.

அங்கே மீராவும் தனது மாளிகை உத்தியானவனத்தில் நிலைகொள்ளாமல் சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். கண்ணனைக் கணவனாகப் பாவிக்காமல் தெய்வமாகவே பாவிக்கும் முயற்சியில் அவள் ஜயித்துவிடலாம்! ஆயினும் கணவனைக் கணவனாகப் பாவிக்கும் முயற்சியில் மட்டும் அவளால் ஜயம் காண முடியவில்லை. 'ஒரு பாத்திக்குப் பாய்கிற நீரைத் தடுத்து இன்னொரு பாத்திக்குப் பாய்ச்சுவது எளிதாக இருக்கலாம்! ஆனால் பிரேமையை அப்படிக் கண்ணனிடமிருந்து கும்பராணாவுக்குத் திருப்ப முடியவில்லையே! அந்தப் பாத்தியில் பாயாமல் நீரைத் தடுத்தால் நீருமே வற்றி உலர்ந்து விடுகிறது!

'காதல் நீர் வற்றி உலருகிறது! ஆனால் இந்தக் கண்ணீர் மட்டும் வற்றவே வற்றாதா? வேண்டாம், வற்ற வேண்டாம்! ஏனெனில், நான் சுயநலமாக அழுது கொள்ளவில்லை! புண்ணிய புருஷர், மகாத்மா மேவார் ராணாவின் கஷ்டத்தை நினைந்தே அழுகிறேன். என்னை அவர் எத்தனை ஆசைகளோடு மணந்தாரோ? அத்தனை ஆசைகளின் மீதும் மண்ணை வாரிப் போட அவருக்கு பகைவியாகிவிட்டபின் எனக்கேது உரிமை? அவருக்குப் பிரேமையைத் தர முடியாதென்றால் முதலிலேயே அவரை மணக்காமல் அல்லவா இருந்திருக்க வேண்டும்? கிரிதாரா, கல்நெஞ்சுக்கார கிரிதரா! கடைசி விநாடியிலாவது நீ வந்து காப்பாய் என்று நம்பி நம்பித்தான் பாழானேன் — இல்லை அவர் வாழ்க்கையைப் பாழாக்கினேன். அவரே உனக்குக் கோயிலெடுத்துக் கும்பாபிஷேகம் செய்யப் போகிறார். உனக்குக் கருணையும் கிருபையும் இல்லாவிட்டால் போகிறது; மானமும் வெட்கமும் இல்லாவிட்டால் போகிறது; நீதியும் தருமமும் கூடவா இல்லாமற் போய் விட்டன? எவ்வளவு வைதால்தான் என்ன? நீ என்னிடம் கோபித்துக் கொண்டு என் மனத்திலிருந்து வெளியேற மாட்டாய். கண்ணீரைக் கொட்டிக் கொட்டிக் கும்பாபிஷேகம் செய்து உன்னைத்தான் என் மனத்தில் ஆணிவேர் சல்லிவேர் விட்டுக் கொண்டு வளரும் விருட்சமாக வளர்த்து விட்டேனே! நீ பெரிய தருவாக வளரும்போது உன்னுடைய நிழலில் நான் வளர்ச்சியை இழந்து நலிந்து நலிந்து சாகிறேன்!'

எவ்வளவு நாழிகைதான் உலவுவது? இரவு மெல்லப் பரவத் தொடங்கியது. மீரா தன் மாளிகையின் சயன அறைக்குச் சென்றாள். நேற்றைய நினைவு வந்தது.

''ரத்தன் ரத்தன்'' என்று உரக்கக் கூவி அழைத்தாள் மீரா. சாதாரணமாக அந்தப் பெயரைச் சொல்லும்போதே மீராவின் குரல் கம்மும். அவளது தந்தையின் பெயரல்லவா? ஆனால் இப்போதோ கனமாக அழைத்தாள்.

''இதோ, வந்தேன், ராணிஜி'' என்று ஓடி வந்தாள் ரத்தினா.

''நான் தூங்கப் போகிறேன். எனக்கு உணவு கினவு எதுவும் வேண்டியதில்லை. இந்த விளக்குகளையெல்லாம் அணைத்துவிட்டுப் போ. போகும்போது கதவை வெளியில் பூட்டிக் கொண்டு போய்விடு. நானே கதவை இடித்தாலும் — பிரபஞ்சமே புரண்டாலும் — விடிவதற்குமுன் கதவைத் திறக்காதே'' என்று கண்டிப்பாக உத்தரவிட்டாள் மீரா.

கும்பராணா உலவிக் கொண்டிருந்த நந்தவனத்தில் கம்மென்று சம்பங்கி மணம் பரவி, அவன் உள்ளத்தில் மோகக் கிளர்ச்சிகளை மூட்டியது. மரங்களில் கட்டியிருந்த கூடுகளிலிருந்து பட்சிகளின் கரகரத்த குரல்கள் போதையின் நிறைவை மந்தமாக வெளியிட்டன. தாழம் புதர்களிலிருந்து மிகவும் தீட்சண்யமான கந்தம் எழும்பி வந்தது. சாரையும் சர்ப்பமும் களித்துக் கும்மாளமிடுகின்றன! ராணாவின் நரம்புகளில் ஓர் அதிர்வு பரவியது.

தனக்குத் தானே அஞ்சியபடி நேரே தனது மாளிகையின் படுக்கை யறைக்குச் சென்றான் கும்பராணா. ''இன்று ராத்திரி எனக்கு உபவாசம்'' என்று பணியாட்களிடம் கூறிவிட்டு சயனக் கிருகத்தின் எல்லாக் கதவுகளையும் அடைத்துக் கொண்டான். அவற்றின் மேல் தாழ்ப்பாள், கீழ்த் தாழ்ப்பாள், பக்கத் தாழ்ப்பாள் யாவற்றையும் அடைத்துக் கொண்டான். தன் மனத்தையே அடைத்துக் கொள்வதாக நினைப்பு போலும்! தலையிலிருந்து கால்வரை வியர்வை வழிய, ஏதோ கொடும் பாவத்திலிருந்து தன்னை ரட்சித்துக் கொண்ட உணர்வுடன் மஞ்சத்தில் வந்து விழுந்தான் கும்பராணா.

கதவு இடிக்கப்படும் ஓசை கேட்டது.

'ஆ! இன்றைக்கும் வந்து என்னைச் சோதிக்கப் போகிறாளா? முடியாது. கதவைத் திறக்க முடியாது.'

தன் உடலை விறைத்துக் கொண்டு மஞ்சத்திலேயே கிடந்தான் கும்பன்.

''அப்பா, அப்பா! கதவைத் திறவுங்கள், அப்பா!'' ராய்மல்லின் குரல்தான்!

ஆபத்தான விஷயமில்லாமல் ராய்மல் வந்து கதவை இடிக்க மாட்டான் என்பது கும்பாஜிக்குத் தெரியும். என்றாலும் அவன் எதிர்பார்த்த பேராபத்து இல்லை! அந்த மட்டும் க்ஷேமம்.

தாழ்ப்பாளை நீக்கிய ராணா, ''வா, ராய்மல், என்ன சமாசாரம்? இந்த வேளையில் வந்திருக்கிறாயே!'' என்றான்.

''அவசர காரியம்தான் அப்பா! மோகல் மகாராணாவின் கொலைக்குக் காரணமான பாதகர்களில் சாசாவையும் மைராவையும் பழி தீர்த்ததோடு நாம் நின்றுவிட்டோமே. அது எவ்வளவு தவறு என்று இப்போது தெரிந்து விட்டது! சதிக்குக் காரண

மான அந்த இன்னொரு சண்டாளன் மஹிபாவை அப்போதே நாம் தேடிப்பிடித்து அழித்திருக்க வேண்டும். தவறிவிட்டோம். அதை இப்போது சொல்லிப் பயனில்லை. மாளவகல்தானிடம் தஞ்சம் புகுந்திருக்கிறான் மஹிபா. கல்தானை மேவாரின்மீது படையெடுக்கக் கிளப்பிவிட்டிருக்கிறான். ஆதார பூர்வமான தகவல்கள் வந்திருக்கின்றன....'' என்று பொரிந்து கொட்டினான் ராய்மல்.

''இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறாய், குழந்தாய்? பெரியப்பா சண்டன்ஜியையும் பிரதானிகளையும் கலந்தாலோசித்து முடிவு செய்வோம்'' என்றான் ராணா.

''ஒருவாறு அந்த முடிவு நமக்குத் தெரிந்ததுதான் அப்பா. மஹிபாவை நம் வசம் ஒப்புவிக்க வேண்டும் என்று நீங்கள் கல்தானுக்கு நிருபம் அனுப்ப வேண்டியதுதான் முதல் நடவடிக்கையாயிருக்கும். அதற்குச் கல்தான் ஒப்பமாட்டான். பிறகு என்ன? யுத்தம்தான். ஆனால் அதெல்லாம் போகப் போக நடக்க வேண்டிய காரியங்கள். உடனடியாகச் செய்ய வேண்டியதற்கு நான் ஏற்பாடு செய்து விட்டேன். இந்த விவகாரம் ஒரு வழியாகத் தீருமளவும் துர்காதேவிக்கு தவன் செய்ய ஏற்பாடு செய்து விட்டேன். நாளையிலிருந்து ஹோமம் தொடங்கிவிடும். நீங்கள்தான் காப்புக் கட்டிக் கொள்ள வேண்டும்'' என்றான் இளவரசன்.

ராணாவுக்கு உடம்பு புல்லரித்தது. ராய்மல்லை அப்படியே வாரிச் சேர்த்துக் கட்டிக் கொண்டு அவனுடைய தோளில் முகத்தைப் பதித்துக் கொண்டான். அவனது கண்களிலிருந்து வழிந்த ஆனந்தபாஷ்பம் ராய்மலின் தோளை நனைத்த அதே போதில், ராய்மல்லின் கண்களிலிருந்து பெருகிய நீர் கும்பனின் கன்னங்களை ஈரமாக்கின.

போர்த் துடிப்பு மிகுந்த ராய்மல், தான் ரட்சை கட்டிக் கொள்ளாமல் தந்தையை யுத்தரங்கத்துக்கு அனுப்ப முற்பட்டுவிட்டான்!

ராய்மல் கும்பராணாவைக் காப்பாற்றி விட்டான்! ஆம், சண்டிஹோமத்துக்காகக் காப்புக் கட்டிக் கொண்டவர்கள் வேள்வி பூர்த்தியாகும் வரையில் பிரம்மசரியம் அநுஷ்டித்தாக வேண்டும்!

**அ**ங்கே மீரா கும்மிருட்டுச் சூழ்ந்த அறையில் அனலிடைப் புழுவாகச் சுருண்டு கொண்டிருந்தாள்.

கதவு திறந்து கொள்ளும் சத்தம் கேட்டது. பதறி விட்டாள் மீரா! அவள் சொன்னதை ரத்தன் கேட்கவில்லையா? கேட்கவில்லை என்றால் என்ன அர்த்தம்? தன் உத்தரவுக்கும் மேலான மகாராணாவின் உத்தரவில்தான் அவன் கதவத்தைத் திறக்கிறானோ?

'இல்லை.... கதவு திறக்கவேயில்லை. தன்னுடைய பிரமைதான். பிரமையா? இதோ, படீரென்று கதவு பிளந்து கொண்டுவிட்டது! கதவுதான்! ஆனால் இந்த சயனக் கிருகத்தின் கதவல்ல. என் நெஞ்சின் கதவை பிளந்து கொண்டு விட்டது. நான் அழுத்தி அழுத்திச் சாத்தியபோதிலும் அது தானாக் [illegible] திறந்து கொண்டு விட்டது. அந்தக் கதவைத் தள்ளிக் கொண்டு ஆகா, இதோ கிரிதரன் — என் ஐயன் கிரிதரன், என் ஸ்வாமி கிரிதரன், என் முன்னே வந்து நிற்கிறான் !'

மீராவால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

நேருக்குநேராக, நெருக்கத்திலும் நெருக்கமாகக் கண்ணன் வந்து நிற்கிறான் ! அவன் முடியிலும், திருமார்பிலும், கரங்களிலும் அணிந்துள்ள திருவாபரணங்களின் ஒளி அந்த அறை முழுதும் வியாபிக்கிறது.

'அவனிடம் என்ன பேசுவது? வந்தாயே என்று வாழ்த்துவதா? இத்தனை நாட்கள் வராமலிருந்தாயே என்று வைவதா? தன்னை நாலுயிரம் விதத்தில் வதைத்ததற்காக அவனிடம் கோபிப்பதா? அல்லது அந்த வதையை அற்பமாக்கிவிடும் பேரானந்தத்தை அளிக்கும் இந்தத் திவ்விய தரிசனத்தைத் துதித்துப் பாடுவதா ?'

கோபாலனின் பாதகமலங்களில் பனித்துளி போல் சில்லென்று விழுந்தாள் மீரா.

கண்ணனின் பாதத்தில் அவள் கண்களை மூடிப் பொறுத்தியிருந்த போதிலும், அவனது திருக்கரங்கள் தனது தோளைப் பற்றி எடுத்து நிறுத்துவதற்காகத் தழைந்து தழைந்து வருவதை அவளுக்கு உள்ளுணர்ச்சி உணர்த்தியது.

சரேலென்று எழுந்திருந்தாள் மீரா. கண்ணனிடமிருந்து விலகி அந்த அறையின் மூலைக்குப் பாய்ந்து சென்றாள்.

பிரேமை சொரிக்கும் கண்களால் மாதவன் அவளைப் பார்த்தான். நேற்றிரவு ராணா அவளைப் பார்த்த போது மீரா எப்படித் திகைத்தாளோ, அதே திகில் இன்றும் அவளைப் பற்றிக் கொண்டது.



பெண் : என்ன டாக்டர்! திடீரென்று கை இல்லாத ஜாக்கெட்டைப் புகழ்கிறீர்கள் ?

டாக்டர்: ஆமாம்! இன்செக்ஷன் செய்ய அது வசதியாக இருக்கிறதே !

- [illegible]

இதயம் பிளந்து விடும்படி கானம் செய்தாள் :

தொட்டுவிடாதே என்னை - கண்ணா
விட்டு விலகிச் செல்வாய்

பிறருக்குரிய பெண் நான் - எந்தன்
பிரேமையை இனி நம்பாதே

பரதாரமா ஈ என்னை - உந்தன்
கரத்தால் தீண்டி விடாதே

கண்ணாரக் காதலைக் காட்டி - எனது
பெண் தருமத்தைக் கொல்லாதே

நந்த குமாரன் நிற்கும் நிலம்
பிருந்தாவனமே அன்றோ ?
முறையை மறந்து அநீதி செய்ய
இறைவனே, இது இடமோ?

கிரிதரன் சிரித்தான்.

அவனுடைய உள்ளடங்கிய மெல்லிய உதரமும், கழையனைய திருத்தோள்களும் குலுங்க, முல்லைப் பல்லொளி பவள அதரத்தில் பிரதிபலிக்கக் குலுங்கிச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பொலி அடங்க அடங்க அதிலேயே அவனது மோகன மூர்த்தமும் அடங்கி அடங்கி மறையலாயிற்று.

மீராவின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஓராயிரம் வெடிகள் வெடித்தன. 'ஐயோ, அந்தக் கால்கள்! அவை முற்றிலும் மறைவதற்குமுன் பிடித்துக் கொண்டுவிட வேண்டும். 'விட்டு விடாதே' என்று யாரிடம் அனவரதமும் முறையிட்டுப் புலம்பினேனோ, அவனையே 'விட்டுப் போ' என்று துரத்துகிறேனே, பாவி! கூடாது. அவனை விட்டுப் போக விடக் கூடாது. அதோ, அந்தச் சரணயுகளங்களைப் பற்றிக் கொள்ள வேண்டியது தான். கணவனின் பாதமாக எண்ணி அவற்றை நான் பற்றமாட்டேன். என் தெய்வத்தின் பாதமாகக் கருதிப் பற்றிக் கொள்வேன். கையினால் பற்ற முடியாமல் அவை மறைந்து விட்டாலும், அவற்றின் ஸ்தூலமான ஸ்பரிச பாக்கியம் எனக்குக் கிட்டாவிடினும், என் மனமாவது அந்தத் திருவடிகளை விட்டு நீங்காமல் நிற்கட்டும்.'

மீரா அலறினாள் :

மீராவின் அருட் பிரபுவே
வாராது வந்த பண்பாளா
ஆரா அமுத சரணத்தில்
மாறுதென் மனம் நில்லாதோ?

மாதவன் குலுங்கக் குலுங்கச் சிரித்தான். அவனது நுட்பமான அதரமும் கழையனைய தோள்களும் குலுங்க, முத்துப் பல்லொளி பவள இதழில் மினு மினுக்க மீராவின் முன் எப்படிச் சிரித்தானோ அப்படியே மதுமங்களனின் முன்பும் இப்போது சிரித்தான்.

கண்ணனுக்குப் புத்தி தடம் புரண்டு விட்டதோ என்றுகூட மதுவுக்கு ஐயமாகி விட்டது. ''ஏன் கண்ணா, எதற்காக இப்படிச் சிரிக்கிறாய்?'' என்று பயந்து கொண்டே கேட்டான் மது.

''சிரிக்காமல் என்ன செய்யச் சொல்கிறாய்? மீராவின் போக்குத்தான் எத்தனை விசித்திரம் பார். 'வா வா' என்று என்னை அழைத்தாள். வந்தவுடன், 'போ போ' என்று துரத்தினாள். 'விடாதே' என்று புலம்பியவளே பிறகு, 'தொடாதே' என்று சூளுரைத்தாள். அவள் சொற்படியே நான் விட்டுப் பிரிந்தாலும் 'பாதத்தைத் தா' என்று மீண்டும் கதறினாள். 'முறை கெட்டவனே, பெண் தர்மத்தைச் சிதைக்க வந்தாயா?' என்று எரிந்து விழுந்த அவளே என்னைப் 'பண்பாளன்' என்றும் அழைத்தாள். 'நாகரன், நாகரன்' என்று என்னைப் பாராட்டிப் பாடினாள். அவளது புத்தியை நான் எப்படியெல்லாம் புரட்டிக் கலக்கியிருந்தால் அவள் இப்படி மாறுபாடாக நடந்திருப்பாள் ?'' என்றான் கண்ணன்.

''இதற்காக வருந்தாதே, கண்ணா!'' என்றான் மது. ''கடலைக் கலக்கிக் கடைந்துதானே அன்று நீ அமுதம் எடுத்துத் தந்தாய்? மீராவும் ஒரு சமுத்திரம்தான். அவள் மனத்தை நீ கலக்கினாலொழிய இசையமுதம் எப்படிப் பிறக்க முடியும்?'' என்றான்.

மதுகூடச் சித்திராலங்காரமாகப் பேசிவிட்டான். எளிய தழைகளுக்கிடையே நானா வர்ண பேதங்களுடன், சித்திராலங்காரமான பூக்கள் மலர்வதுண்டு அல்லவா ?

''அப்புறம் சொல், கிருஷ்ணா'' என்றான் மதுமங்களன்.

''சொல்ல என்ன இருக்கிறது? மீரா என்னை ஆண்டவனாக மட்டும்தான் பாவிக்கத் தயாராயிருக்கிறாள். என்னால் அவளை நாயகியாகத்தான் பார்க்க முடிகிறது. நான் அப்படிப் பார்த்தால் தருமம் கெட்டவன் என்பது அவள் எண்ணம்!'' கண்ணன் மதுமங்களனின் முகத்தைப் பார்த்தான்.

மீராவின் கருத்து தவறல்லவே என்பது போன்ற குறிப்புத்தான் மதுவின் முகத்திலும் நிழலாடியது.

''என்ன மது? சாஸ்திரோக்தமாக ராணாவின் தர்மபத்தினியாகிவிட்டாள் மீரா. அதன் பிறகு அவளை நான் நாயகியாகப் பார்ப்பது அக்கிரமம்தானே? அந்த அக்கிரமத்துக்காக என்னை அவள் அருவருத்து ஒதுக்கித் தள்ளியது பரம நியாயம்தானே?'' கண்ணன் சிரிக்கத் தொடங்கி விட்டான்.

மாடத்தில் நின்று கொண்டிருந்த மீராவின் கண்களிலிருந்து ஆறாக நீர் வழிந்தது. கனிகள் வெம்பி வெம்பி வாடிப் போனால் நீர் கசியுமே, அப்படி வெம்பி, வெதும்பி வாடி வாடித்தான் மீரா கண்ணீர் உகுத்துக் கொண்டு நின்றாள்.

'தர்மம் எவனது இயல்போ, எவன் தர்ம நாயகனோ, தர்மத்தின் ஸ்வரூபம் எவனோ அவன் அதர்மம் செய்திருப்பானா? அவனை அற்பப் பதரான நான் அக்கிரமக்காரன் என்று சாடி விரட்டுவதா ? அப்படியும் அவன் ஏன் இன்று மீளவும் இங்கு வந்திருக்கிறான்? என்னை ஒரு பழிச் சொல் கூறாமல் என் கதையைச் சுவைத்துச் சுவைத்துச் சொல்கிறான்?'

''கண்ணா, என்னை இம்சிக்காதே. மேலே சம்பவங்களைச் சொல்'' என்றான் மதுமங்களன்.

அப்புறம் அதிகமாகச் சொல்வதற்கு எதுவுமில்லை.

மாளவ சுல்தான் மகம்மது கில்ஜி தன்னிடம் அடைக்கலம் புகுந்த மஹிபாவை சித்தோரில் ஒப்புவித்துவிட வேண்டும் என்று

# மக்களுக்கு உணவளிக்கவும் உதவுகிறது எண்ணை

பம்பாயில், கடும்பகலில் டப்பாவாலாக்களின் நெரிசல் ஒரு சகஜமான காட்சி. சாப்பாட்டு டப்பாக்களை எடுத்துச் சென்று உரியவரிடம் குறித்த நேரத்தில் சேர்ப்பிக்கும் இத் தொழில் தனித் தொழிலாகவே இயங்குகிறது இந் நகரிலே. பல்வேறு நகரங்களில் இத் தொழிலின் முறைகள் வேறுபடலாம். உணவின் முழுப் பயனையும் பெற, உரப் பொருள்கள், பூச்சி நாசினிகள் இவை போன்றவை மூலம், எண்ணை பெரிதும் உதவுகிறது. உணவு தயாரிக்கப்படவோ மண்ணெண்ணை பெரிதும் தேவைப்படுகிறது. பல்வேறு போக்குவரத்துச் சாதனங்கள் மூலம் உணவுப் பொருள்களை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்வதற்கும் எண்ணை யின் சேவை பெரிதும் அவசியமாகிறது. சொல்லப் போனால், அன்றாட வாழ்க்கை யின் பாதாரப்பட்டத் தேவைப் பூர்த்திக்கு ஏதேனுமொரு வகையில் எண்ணை பயன் படுகிறது. விவசாயம், தொழில் போக்குவரத்துத் துறை—இவையெல்லாம் செவ்வனே இயங்க, இண்டியனாயில், தனது பலவகைப்பட்ட உயர்தரப் பெட்ரோலியத் தயாரிப்புகள் மூலம், சீரிய முறையில் உதவி வருகின்றது.




—பொருளாதார வளமைக்கான தேசியப் பொறுப்புணர்வு

## இந்தியன் ஆயில் கார்ப்பொரேஷன் லிமிடெட்



கும்பராணா செய்தி அனுப்பினான். அதற்குக் கில்ஜி இணங்கவில்லை.

போர் ஆயத்தங்கள் தொடங்கின. சிசோதிய — ராட்டோர் பகை ஒருவழியாகத் தீர்ந்து சாந்தமும் சமாதானமும் விரியத் தொடங்கிய போதில் மீண்டும் யுத்த லக்ஷ்மி பிரசன்னமாகி விட்டாள்.

அசல் யுத்தம் மூளுமுன்பு அவசரமாக ராய்மல்லுக்கும் ஜோதாவின் மகள் சிருங்கார தேவிக்கும் திருமணம் நடந்தேறியது.

திருமணத்தின் போது தன் தாயைக் காணலாம் என்று ஆவலோடு வந்த மீரா அவளது மறைவுச் செய்தியைக் கேட்டு அதிர்ந்து போனாள். மகளைக் கணவன் கையில் ஒப்படைக்க வேண்டும் என்பதற்காகவே உடன் கட்டை ஏறாமலிருந்த சந்திரமுகி, மீராவைச் சித்தோருக்கு அனுப்பிய கையுடனேயே சந்தன மரத் தண்டொன்றை ரத்தன்சிங்காகப் பாவித்து, அதைத் தகனம் செய்து, அந்த அக்கினியில் தானும் மூழ்கிப் பதிவிரதா லோகத்தில் இழைத்த சந்தனமாக மணந்து விட்டாள். 'தாய் மறைந்ததும்கூட ஒரு விதத்தில் நல்லதுதான்! நான் மேவார் மகாராணியாக வாழ்வாங்கு வாழ்வேன் என்று அவள் எண்ணியிருப்பாள். நான் படுகிற இன்னலையும் சிறுமையையும் என் பைத்தியக்காரப் போக்கையும் அறியாமல் அவள் போனதே நல்லது' என்று மீரா மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டாள்.

சிருங்கார தேவியைச் சித்தோருக்கு அழைத்த கையோடு ராய்மல்லிடம் நாட்டு நிர்வாகத்தை ஒப்புவித்துவிட்டு மகாராணா மாளவ கல்தானோடு போருக்குப் புறப்பட்டான். ஆயிரத்து நானூறு யானைகளும் ஒரு லட்சம் புரவிகளும் அவனுடன் செல்ல ஆயத்தமாயின.

அது மீராவின் நெஞ்சை நெகிழ்த்த ஒரு தினம். ஏகலிங்கர் ஆலயத்துக்குச் சென்ற மகாராணா, போர்க்களத்தில் தனக்கு வீர சுவர்க்கம் கிடைத்தாலே மீராவுக்கும் தனக்கும் அமைதி கிட்டும் என்று பிரார்த்தித்து விட்டுக் கிளம்பினான். பட்டமகிஷியிடம் விடைபெற்று, அவள் நெற்றியில் அணிவிக்கும் திலகத்துடனேயே யுத்தரங்கம் செல்வது க்ஷத்திரியர் வழக்கம். 'மீரா எப்படி நடந்து கொள்வாளோ?' என்ற ஐயத்துடனேயே, ராஜ ஸ்திரீகள் குழுமியிருந்த மண்டபத்துக்கு வந்தான் கும்பன்.

ஆரத்தித் தட்டுடன் வந்த மீராவை உணர்ச்சிப் பெருக்கு மொத்தி மோதியது. 'மனம் போல மாங்கலியம் என்பார்களே, இவர் போருக்குச் சென்று நல்லபடியாகத் திரும்ப வேண்டுமே! கிரிதரா, உன்னை எவ்வளவுதான் ஒதுக்கினாலும் வேறு யாரிடம் வேண்டிக் கொள்வேன்? நீதான் அவரை மாளவத்திலிருந்து மீளவும் வெற்றிவீரராகக் கொண்டு வந்து சேர்க்க வேண்டும். இல்லாவிடில் என்னை நானே மன்னித்துக் கொள்ள முடியாது' என்று உள்ளம் நீராளமாக உருகிப் பிரார்த்தித்தாள்.

முதலில் சௌபாக்யதேவியை நமஸ்கரித்தான் கும்பன். அவள் அவன் உச்சந்தலையில் இரு கரங்களையும் அழுந்த வைத்துவிட்டு, பொற்காசு ஒன்றால் அவனது சிரத்தைச் சுற்றி அதனை வேதியர் ஒருவருக்குத் தாம்பூலத்துடன் அளித்தாள்.

''வென்று வா என்று உன்னிடம் நான் சொல்ல வேண்டியதேயில்லை. துர்காபரமேசுவரி என்றும் உன்னுடன் இருக்கிறாள். இது வரை நீ செய்த வீர சாகஸங்களுக்கு மேலாக இப்போது நான் கேட்கப் போகிறேன்'' என்று நியாயமான கர்வத்துடன் உடல் பூரித்துக் கூறினாள் சௌபாக்யதேவி. அர்ஜுனனுக்குக் குந்தி தேவி ஆசி தந்து அனுப்பியது போலிருந்தது அந்தக் காட்சி.

அடுத்து உதயா அண்ணனிடம் ஓடிவந்தான். நீர் மல்கும் கண்களுடன், கனத்த நெஞ்சுடன் அவனது கைகளில் ரட்சையைக் கட்டினாள். அது வெறும் நூல் சரடல்ல. தங்கச் சரட்டில் நல் முத்து இழைத்த ஓர் அற்புத ஆபரணமாகவே இருந்தது அது. ஆம், அன்று ஸாவண் மாதத்தின் கடைசி நாள். 'ராகி' என்ற சுபதினம். தங்கள் சோதரரின் நல் வாழ்வுக்காகச் சகோதரிகள் நோன்பிருந்து ரட்சா பந்தனமாகச் சரடு கட்டும் நன்னாளது.

மீராவும் ராணாவிடம் வேகமாக வந்தாள். திருமணத்தின்போது ராணா அவள் கைகளில் கட்டியிருந்த சரட்டினை அவசரமாக அவிழ்த்தாள். தன் தலையில் செருகியிருந்த ஒரு சண்பக புஷ்பத்தை எடுத்து அதில் முடிந்தாள். ராணாவின் கரத்தைப் பற்றி அதில் அந்தச் சரட்டை மும்முறை சுற்றிக் கட்டினாள். அதற்கு மற்றவர்கள் என்ன அர்த்தம் செய்து கொண்டார்களோ? மீரா மனத்தில் நினைத்ததை ராணா நன்றாகப் புரிந்து கொண்டு விட்டான். ஒரு துச்சமான உறவை அவள் உச்சமாக்கி நிறைவு செய்து விட்டாள்!

அதன் பின் மீராவின் மனத்திலோ உடலிலோ நடுக்கம் எதுவும் இல்லை. கும்பனுக்குப் பாங்காக ஆரத்தி சுழற்றித் திலகமிட்டு வணங்கி வழியனுப்பினாள். (தொடரும்)



''கோல்! கோல்! வெல் டன்!''

''ஓய்! நீயும் உம்ம பாராட்டுதலும் நாசமாப் போக! எதிர்த்தரப்பு கோலில் பந்தை அடிக்க என் வளவு முயன்றும் முடியாமல், அலுத்துப் போய்க் கடைசியில் தம் பக்கத்துக் கோலுக்குள்ளேயே பந்தை அடிச்சிருக்கான், ஓய்!''

## முகமேயானாலும்...



ஸாமர்சட் மாம் இறுதி வரையில் புரிந்து கொள்ள முடியாத புதிராகவே இருந்தவர். ஆனால் அவர் மட்டும் மற்றவர்களை எளிதில் எடை போட்டு விடுவார்.

ஒரு சமயம் அவருடைய ஒரே செல்வ மகளான லிஸா அவரிடம் கேட்டாள்: ''அப்பா, உங்களுடைய கதையொன்றில் என்னை ஒரு பாத்திரமாகச் சித்திரிக்க வேண்டும்''.

அதற்கு அந்தப் பொல்லாத தந்தை, ''பேஷாகச் சித்திரிப்பேன் — ஆனால் அந்தப் பாத்திரத்தை நீ விரும்ப மாட்டாயே, அம்மா!'' என்றார்.

— ஏ. கே. கந்தசாமி

# இங்கிலாந்தில் சேலம் இரும்பு

— நஜன் —



சேலத்தில் உருக்காலை ஏற்படுத்துவது குறித்து இன்னும் முடிவு செய்யப்படவில்லை. எல்லாம் பேச்சளவில் இருக்கிறது. இந்தச் சேலம் இரும்பு உலகப் பிரசித்தி பெற்றது என்பது பலருக்குத் தெரிந்திராது.

பதினெட்டாவது நூற்றாண்டிலேயே அயல் நாட்டு எஃகு நிபுணர்களைச் 'சேலம் இரும்பு' கவர்ந்திருக்கிறது. பரங்கிப்பேட்டையில் சேலம் இரும்பைக் கொண்டு எஃகு உற்பத்தி செய்யும் வேலையைச் சில வெள்ளைக்கார ஸ்தாபனங்கள் செய்து வந்தன.

ஜான் மார்ஷல் ஹீத் என்ற கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரி இந்த எஃகை உற்பத்தி செய்ய வேண்டும் என்று திட்டமிட்டு இதில் கவனம் செலுத்துவதற்காகவே தம் வேலையை ராஜினாமா செய்தார். சேலம் இரும்புக் கனியை இங்கிலாந்துக்குக் கொண்டு சென்று அங்கு ஆராய்ச்சிகள் நடத்தினார். இதைக் கொண்டு செய்யப்பட்ட எஃகுப் பொருள்கள் இங்கிலாந்தில் கிடைக்கும் மிகச் சிறந்த எஃகினால் செய்த பொருள்களைவிடச் சிறந்து காணப்பட்டனவாம். இவர்தான் 1830ல் பரங்கிப்பேட்டையில் இரும்புத் தொழிற்சாலையை ஏற்படுத்தினார். ஆசியாவில் ஏற்பட்ட முதல் உருக்காலையே இதுதான்.

இவர் பெற்ற வெற்றியைக் கண்ட பின்பே 'ஜம்ஷெட்பூரில்' 'நேஷனல் மெட்டலர்ஜிகல் லாபரேட்டரி' ஆரம்பிக்கப்பட்டது. சென்னை அரசாங்கம் ஹீத்துக்குக் கடன் உதவி அளித்துப் பல சலுகைகளையும் காட்டியது. ஹீத் முயற்சி காரணமாகச் சேலம் இரும்பு ஏராளமாக இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டது. வடவேல்ஸில் ஏஞ்செல்ஸி தீவையும் கோனவன் என்ற இடத்தையும் இணைக்கும் 'பிரிட்டானியா டியூப்ளர் ரயில்வே'யின் பாலம் முழுவதுமே இந்தச் சேலம் இரும்பினால்தான் கட்டப்பட்டது. இப்பாலம் 1846-50 வருடங்களுக்கிடையே கட்டப்பட்டதாகும். இதற்கு 621,865 பவுன்கள் செலவாகியது. பத்தொன்பதாவது நூற்றாண்டு பொறி இயல் திறமைக்கு இது ஓர் எடுத்துக் காட்டாக விளங்குவதுடன் இன்னும் இந்தப் பாலம் உபயோகத்திலிருந்து வருகிறது.

சென்னையில் முன் காலத்தில் கடலில் சிறிது தூரத்துக்கு ஒரு பாலம் இருந்தது. அதுவும் சேலம் இரும்பினால் ஆனதுதான். புதுச்சேரியிலுள்ள பெல்ஜியன் ரோலிங் மில்லுக்கு இது விற்கப்பட்டு விட்டது.

தமிழ் நாட்டில் அக்காலத்திலேயே எஃகு தயாரிக்கும் உலைக் களங்கள் இருந்திருக்கின்றன. 1864 முதற்கொண்டே சேலம் இரும்புக் கனியைப் பரிசோதித்த நிபுணர்கள் எல்லோரும் இம்மாதிரி சிறந்த ரகம் வேறு எங்குமில்லை என்று கருத்துத் தெரிவித்துள்ளனர். அதுவும் கஞ்சமலைப் பகுதியில் கிடைக்கும் இரும்புக் கனி மிகச் சிறந்ததாம். இந்த அருமையான பொருளைப் பயன்படுத்திக் கொள்ள நமது அரசாங்கம் 'மீன மேஷம்' பார்த்துக் கொண்டிருக்கிறது.

## முன்னேற்றம்



ஓர் அமெரிக்கர் முதல் தடவையாக மாஸ்கோ வந்திறங்கினார். மாஸ்கோவில் நுழைந்ததும், ஓரிடத்தில் ஒரே கும்பலாக இருக்கவே, என்ன விஷயம் என்று தம்முடன் வந்த வழிகாட்டியைக் கேட்டார். அவன், ''இது உருளைக் கிழங்குக்கு க்யூ'' என்றான். இன்னும் சிறிது தூரம் சென்றதும் மற்றொரு க்யூவைக் காட்டி, ''இது முட்டைக்கு'' என்றான். இதைக் கண்ட அமெரிக்கர், ''என் நாட்டில் இந்தத் தொல்லையே இல்லை. கடைக்குப் போன் செய்தால் எது வேண்டுமானாலும் வீட்டுக்கு வந்து விடும்'' என்றார். அந்த ரஷ்யனோ, ''அடடா! நீங்கள் இவ்வளவு பின்தங்கியிருக்கிறீர்களே! ஐம்பது வருடங்களுக்கு முன் நாங்களும் அந்நிலையில்தான் இருந்தோம். ஆனால் கம்யூனிஸம் வந்த பிறகு ஏற்பட்ட முன்னேற்றம் தான் இது'' என்றான். -வி. எஸ். கே

## 'குளுகுளு' அறை அல்ல; 'குளுகுளு' உடை!

அதிவெப்பம் மிகுந்த சூழ்நிலையில் பணியாற்றுகிறவர்களுக்குப் பயன்படக்கூடிய கவச ஆடையை ஃபிராங்சன்ஸ்டின் குரூப் லிமிடெட் என்ற மான்செஸ்டர் நிறுவனம் தயாரித்திருக்கிறது. வட இங்கிலாந்தில் உள்ள ஒரு தொழிற்சாலையில் நடத்திய சோதனைகளிலிருந்து இந்த ஆடையை அணிந்து கொண்டிருப்பவர், 1800 டிகிரி சென்டிகிரேட் வெப்ப நிலையில் உள்ள உலைக்கு அருகில் எவ்விதத் தீங்குமின்றி முப்பது நிமிஷ காலம் பணியாற்ற முடியும் என்று தெரிந்தது. இந்த ஆடையின் உட்புறத்தில் தண்ணீர் ஓடக் கூடிய முறையில் 400 அடி நீளத்துக்குக் குழாயைச் சுற்றி வைத்திருக்கின்றனர். தேவையான சமயத்தில் இதில் நீரைச் சேர்த்துக் கொள்ளவும் வேண்டாதபோது நீரை வெளியேற்றி விடவும் முடியும். நைலான் நூலால் பின்னப்பட்ட இந்த ஆடை மற்ற ரகக் கவசங்களை விட மேலானது.

## லாரி மோதி சைக்கிள் சட்னி!

## லாரி டிரைவர் விடுதலை அடைந்தார்!

என்ன, 'இப்படியும் ஒரு பத்திரிகைத் தலைப்பு இருக்க முடியுமா' என்று ஆச்சரியப்படுகிறீர்களா? முடியும்; இங்கல்ல பிரிட்டனில்.

சமீபத்தில் லண்டன் நீதிமன்றம் ஒரு ரசமான தீர்ப்பு அளித்தது! ஒருவர் சைக்கிளை நடைபாதையில் தள்ளிக் கொண்டே ஒரு நண்பருடன் சுவாரசியமாய்ப் பேசியபடி நடந்து போய்க் கொண்டிருந்தார். எஃகுக் குழாய்களை ஏற்றி வந்த லாரி ஒன்று, சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தவர் மீது மோதி, அவரைக் கீழே தள்ளிவிட்டது. அவர் உயிருக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்து விடவில்லை. ஆனால் அவர் சைக்கிள் தான் சட்னியாகப் போய்விட்டது. இதைக் கண்டு ஆத்திரமடைந்த சைக்கிள்காரர், லாரி டிரைவர்மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார்.



நீதிபதி வழக்கைக் கேட்டுத் தீர்ப்பை லாரி ஓட்டிக்குச் சாதகமாகவே அளித்தார். அந்தத் தீர்ப்பு என்ன தெரியுமா? ''சைக்கிள்காரர் சைக்கிளுக்கு உண்டான பாதையில் செல்லாமல் நடைபாதையில் சைக்கிளுடன் சென்றது அவர் தவறு'' என்பதுதான்.




1. ஒரு தாய் அவரது மகள் இவ்விருவருமே நோபல் பரிசு பெற்ற அதிர்ஷ்டசாலிகள். இவ்விரு பெண்மணிகளின் பெயர்களை ஊகிக்க முடிகிறதா?

2. குறட்டை விடும் பழக்கம் (Snoring) பெண்களைவிட ஆண்களிடம்தான் அதிகம் காணப்படுகிறது என்பது உண்மையா?

3. ஐ. நா. காரியதரிசி ஊதாண்ட்டின் மாதச் சம்பளம் எவ்வளவு?

4. நேபாள தேசத்துக்கு நாற்புறமும் எல்லைகளாக அமைந்துள்ள பிரதேசங்களைக் கணக்காகக் கூற முடியுமா?

5. பிரிகேடியர், மேஜர், கர்னல், மேஜர் ஜெனரல், காப்டன், லெப்டினண்ட் கர்னல்.

(தாறுமாறாகத் தரப்பட்டுள்ள இந்த ராணுவப் பதவிகளை ஒழுங்காக வரிசைப்படுத்த முடியுமா? -மேலிருந்து கீழ்)

6. 1939 செப்டம்பர் மூன்றாந் தேதி பிரிட்டன், பிரான்ஸ் இவ்விரு நாடுகளுக்கும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தினமாகும். எப்படி?

7. தமது விசிறிகளால் ''இந்திய டக்ளஸ் ''ஃபேர் பாங்க்ஸ்'' (Douglas Fairbanks Sr) எனப் போற்றப்பட்ட இந்திய நடிகர் யார்?

8. மிகப் பரிசுத்தமான தங்கம் எத்தனை 'காரட்'கள் கொண்டது? 22? 24? 25?

9. மனிதன் தோன்றுவதற்கு 50 மிலியன் ஆண்டுகளுக்கு முன்னரே பூமியில் சஞ்சரித்ததாகக் கூறப்படும் பிரம்மாண்டமான ஒரு மிருகம். இதன் பெயர்?

10. கடற்பஞ்சு (Sponge) தாவர இனத்தைச் சார்ந்தது என்பது சரியா?

(விடை: 74-ம் பக்கம் பார்க்க)






அமரர் உலகில் தேவேந்திரன் ஒரு நாள் தேவர்களைத் தன் சபைக்கு வரும்படி வேண்டுகோள் விடுத்தான். அவன் வேண்டுகோளுக்கு இணங்கி எல்லாத் தேவர்களும், முனிவர்களும் அங்கு வந்தனர். அவர் அவர்களுக்கு உரிய இடத்தில் அமர்ந்தனர்.

தேவேந்திரன் அவர்களை நோக்கிப் பின் வருமாறு கூறினான். "தவத்தில் சிறந்த முனிவர்களே! புண்ணியம் பண்ணின தேவர்களே! இன்று நம் சபைக்கு இன்னுமொரு புண்ணியவான் பூமியிலிருந்து வருவார். அவரை மரியாதையாக வரவேற்கவே உங்களையெல்லாம் நான் சபைக்கு வரும்படி அழைத்தேன். நம் இருச் சபையில் இன்னுமொரு புதிய அங்கத்தினரைச் சேர்த்துக் கொள்வதில் மட்டில்லா மகிழ்ச்சி அடைகிறேன்."

தேவர்களும் முனிவர்களும் அந்தப் புதிய நபரின் வரவை ஆவலுடன் எதிர்நோக்கிக்காத்திருந்தனர். அநேக ஜோடிக் கண்கள் வாயிற்படியையே பார்த்துக் கொண்டிருந்தன.

நடுத்தர வயதுடைய ஒரு மானிடன் தேவ தூதர்கள் புடைசூழ இந்திர சபைக்கு வந்து கொண்டிருந்தான். அவன் உடுத்தியிருந்த ஆடையோ ஒரே கந்தல் – அழுக்கேறிய ஆடை. வாசற்படியருகில் அவன் வருவதைக் கண்ட இந்திரன், தன் இடத்தை விட்டு எழுந்து. அவன் அருகில் சென்று மரியாதையுடன் அழைத்து வந்து தன் சிம்மாசனத்துக்குப் பக்கத்தில் போடப்பட்டிருந்த ஆசனத்தில் அமரும்படி கேட்டுக் கொண்டான்.

வந்திருந்த மனிதனுக்கோ ஒன்றும் புரியவில்லை. நடுங்கியவாறே அவ்வாசனத்தில் அமர்ந்தான். மற்றவர்கள் இந்த விநோதத்தைப் பார்த்து அதிசயித்தவண்ணம் இருந்தனர். இந்திரன் பிறகு அவர்கள் இருக்கும் பக்கம் திரும்பினான். "தேவர்களே! முனிவர்களே! 'இந்தப் புதிய நபரை உங்களுக்கும் மேலாக மதித்து என் சபையில் சேர்த்துக் கொள்வதில் பெருமிதம் அடைகிறேன். பூவுலகில் இவர் ஓர் ஏழை. பிச்சை எடுத்து...."

இந்திரன் தன் சொற்பொழிவை முடிக்கவில்லை. அங்கு குழுமியிருந்த தேவர்களுக்கு எல்லாம் இதைக் கேட்டவுடன் ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. போயும் போயும் ஒரு பிச்சைக்காரனுக்கா இந்த உன்னத கௌரவம் என்று அவமானமும் ஆத்திரமும் அடைந்து, அச்சபையை விட்டு அனைவரும் ஒருமுகமாக வெளிக் கிளம்பினர். தேவேந்திரன் பொறுமையுடன் தன் சொற்பொழிவை முழுதும் கேட்குமாறு அவர்களை வேண்டிக் கொண்டும் பயனில்லை. என்ன செய்வது என்று தெரியாமல் அவன் திகைத்து நின்றான்.

அச்சமயம் ஆண்டவன் அங்கு தோன்றினார். தேவ சபையில் இக்குழப்பம் உண்டான காரணத்தை அறிய விரும்பினார். நடந்தவற்றை தேவர்கள் ஆத்திரத்துடன் ஆண்டவனிடம் புகார் செய்தனர்.

இறைவனுக்கு இந்திரன் இந்த ஏழையை எல்லாத் தேவர்களிலும் சிறந்தவனுகக் கருதுவதின் காரணம் தெரியும். இருந்தாலும் அதற்குண்டான சமாதானத்தைக் கூறி இந்திரனின் செய்கை நேர்மையானது என்று மற்றவர்களை நம்பும்படி செய்ய விரும்பவில்லை. அவர்களாகவே இந்த ஏழை தங்களைவிடச் சிறந்தவன் என்று கருதினால் அமைதி நிலவும் என்று எண்ணினார். அவர்களாகவே ஒருமனதாக இவன் இந்திரனுக்குப் பக்கத்தில் உட்காரத் தங்களைவிட அருகதை உள்ளவன் என்று கூறும்படி செய்ய ஒரு யுக்தியைக் கையாண்டார்.

எல்லாரையும் சற்று அமைதியாக இருக்கும்படி கேட்டுக் கொண்டார் கடவுள். பின் ஒவ்வொருவராகத் தான் எந்தக் காரணத்தினால் இப்பதவி அடைய நேர்ந்தது என்பதை விளக்கும்படி கட்டளை இட்டார்.

முதலில் எழுந்து நின்ற தேவன் ஓர் அரசன். அவன், "நான் பூமியில் ஓர் அரசனாக இருந்தேன். செம்மையாக ஆட்சி புரிந்தேன். என் குடிமக்களை என் மக்கள்போல் பாவித்து நலமுடன் பேணி வந்தேன். என் மக்களை நான் நேசித்தது போல், மக்களும் என்னை நேசித்தனர். இக்காரணங்களுக்காக இந்திரன் எனக்கு இந்த உலகில் இடம் தந்ததாகக் கூறினார்" என்றான்.

கடவுள்: "நன்று. அரசனுக்குரிய கடமையைச் செய்ததால் நீ இந்தப் பதவியை அடைந்தாய்."

இரண்டாவது தேவன்: "நான் ஒரு வேதியன். பூவுலகில் தினம் வேதம் ஓதினேன். பல மாணவர்களுக்கு வேதம் ஓதுவித்தேன். மக்களுக்கு அறநெறி போதித்தேன். தருமம் தழைத்தோங்கும்படி செய்தேன்.

கடவுள்: "உம்முடைய செயல் போற்றத்தக்கதே."

மூன்றாமவன்: "நான் பூமியில் ஒரு பெரிய பிரபு. என்னுடைய செல்வத்தில்

பெரும் பகுதியைத் தான தருமங்கள் செய்தேன்.''

கடவுள்: ''நற்பண்புள்ளவனே! உன்னிடம் இருந்த சிறு பகுதிச் செல்வத்தை என்ன செய்தாய்?''

மூன்றாமவன்: ''ஆண்டவனே, என் மனைவி மக்கள் வாழும் பொருட்டுச் சிறு செல்வமாவது அவர்களுக்கு வைக்க வேண்டாமா?''

கடவுள்: ''ஆம். நன்றே செய்தாய்.''

நான்காமவன்: ''நான் ஒரு போர் வீரன். எதிரிகள் என் நாட்டைத் தாக்கிய போது, அஞ்சா நெஞ்சத்துடன் போர் செய்து, தாய் நாட்டைக் காக்கப் போர்க்களத்திலேயே மாண்டேன்.''

கடவுள்: ''வீரத்திருமகனே, தாய்நாட்டைக் காக்கப் போர்க்களத்திலேயே புறங்கொடாது மாண்ட பெருமகனே! உனது வீரம் வாழ்க!''

இப்படியாகக் கடவுள் ஒவ்வொருவரும் சொர்க்கத்தில் இடம் பெற்ற காரணத்தைக் கேட்டறிந்து அவரைப் புகழ்ந்தார். கடைசியாக அந்தப் பிச்சைக்காரனையும் அழைத்து



ஐகலின்

அவன் சொர்க்கத்துக்கு வந்த காரணத்தை அறிய விரும்பினார்.

பிச்சைக்காரன்: ''ஆண்டவனே! எனக்கு எதற்காகச் சொர்க்கத்தில் இடம் தந்தார் என்பதை இந்திரன் இன்னமும் சொல்லவில்லை. நானோ ஒரு பிச்சைக்காரன். கல்வி அறிவும் இல்லாதவன். மற்றவர்கள் செய்த நற்செய்கைகளைப் போல் நான் தாய்நாட்டுக்காவது, மக்களுக்காவது ஒருவித சேவையும் செய்ய வாய்ப்பைப் பெற்றிலேன். வறுமையின் பிடியில் அகப்பட்டு உழன்ற நான் என்னைக் காப்பாற்றிக் கொள்ளவே சிரமப்பட்டுக் கொண்டிருக்கையில் மற்றவர்களின் நலனைப் பற்றி நினைக்க நேரம் ஏது? அல்லது நல்லது செய்ய வாய்ப்புத்தான் ஏது?''

கடவுள்: ''பரிதாபம். உன் நிலைக்கு வருந்துகிறோம். உன்னைக் கஷ்டத்தினின்றும் விடுவித்துக் கொள்ள எப்பொழுதாவது எம்மை வேண்டிக் கொண்டது உண்டா?''

பிச்சைக்காரன்: ''ஐயனே! உண்மையை ஒளிவு மறைவு இன்றிக் கூறுவதற்கு என்னை மன்னித்தருள வேண்டுகின்றேன். உம்மை நான் ஒரு போதும் துதித்தேன் இல்லை. அதற்கு மாறாக உம் எண்ணம் எழும் போதெல்லாம் உம்மை நிந்தித்தேன். பக்கத்து நாட்டு அரசன் எங்கள் நாட்டின் மீது படையெடுத்து வந்தான். இருவருக்கும் கடும் போர் நடந்தது. இரு தரப்பிலும் வீரர்கள் கடும் போர் புரிந்தனர். பேராசை பிடித்த அரசன் ஒருவன் மண்ணும் பொன்னும் பெற வேண்டி மாற்றானுடன் போர் தொடுக்கிறான். ஒரு பாவமும் அறியா வீரர்கள் இருதரப்பிலும் தங்கள் தங்கள் அரசனுக்காக வீரத்துடன் போர் புரிந்து மடிகின்றனர். இவ்விளம் வலிமை மிக்க வீரர்கள் தங்கள் மனைவி மக்களையும், வயதான தாய் தந்தையரையும் தவிக்க விட்டு விட்டுப் போரில் மடிகின்றனர். பேராசை பிடித்த அவ்வரசனைத் தண்டிக்காது விட்டீர்கள். போராடி மடியும் ஒரு பாவமும் அறியா வீரர்களை நீங்கள் லட்சியம் செய்யவில்லை. அவர்கள் சுற்றத்தார் துன்பத்தில் தவிப்பதையும், அத்துன்பத்திலும் உம்மை நோக்கி வேண்டிக் கொள்வதையும் பொருட்படுத்தாமல் இருந்தீர்! நீரா கடவுள்! நீரா தெய்வீகத் தன்மை உடையவர்! நீரா அன்பு வடிவானவர்! நீரா கருணை உள்ளவர்! இதெல்லாம் வெறும் பொய் என்று நினைத்து உம்மை நிந்தித்தேன்......''

இம்மொழியினைக் கேட்டதும் கடவுள் பாதிக்கப்பட்டவர் போல் கடும் கோபம் கொண்டு, இந்த நாத்திகனுக்கு இந்திர லோகத்தில், அதுவும் எல்லோரைக் காட்டிலும் உன்னத பதவியைத் தந்த காரணத்தை விளக்கும் பொருட்டு இந்திரனைக் கட்டெரிப்பது போல் பார்த்தார்.

இந்திரன் பணிவாக வணங்கினான் அவரை. அமைதியுடன் கூறலுற்றான்:

''சர்வ வல்லமையும் பொருந்திய கடவுளே! நீர் சர்வ சக்தி வாய்ந்தவர். உமக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. இருப்பினும் உமது விருப்பத்துக்கு ஏற்ப இந்த ஏழைக்கு என் உலகில் உன்னத பதவியைக் கொடுத்ததற்கான காரணத்தை விளக்குகிறேன். இந்தப் பிச்சைக்காரனுக்குத் தான் செய்த நற்காரியங்களைக் கூறக்கூடத் தெரியவில்லை, பாவம்! எதற்காக உம்மை நிந்திக்க நேர்ந்தது என்பதைக்கூடத் தெளிவாகக் கூற இயலவில்லை. பூமியில் இவன் வாழ்ந்து வந்த நாட்டின் மீது பக்கத்து நாட்டரசன் படை எடுத்து வந்தான். இவன் நாட்டு மக்கள் மிகவும் நல்லவர்கள். அரசனும் மிக நல்லவன். தங்கள் அரசனைப் பகை அரசன் தாக்க வந்ததும் எல்லோரும் ஒன்று சேர்ந்து அரசனுக்கு உதவி புரிய முன்வந்தனர். இரு நாட்டு அரசர்களுக்கும் கடும் போர் நிகழ்ந்தது. போர்வீரர்களுக்கு வேண்டிய உணவும், உடையும், ஆயுதங்களும் நிறையக் கொடுக்க வேண்டி இருந்ததால் அவனுடைய பொக்கிஷம் வறண்டது. பகைவன் பலம் பொருந்திய பெரும் படையுடன் அவன் நாட்டைத் தாக்கினான். அவன்

நாக்குதலே எதிர்த்து நின்று சமாளிக்கவும், வெற்றி பெற வும் அரசனுக்கு நிறையப் பணம் வேண்டி யிருந்தது. ஆகையால் அவன் தன் குடி மக்களைத் தாராளமாய்ப் பொருள் கொடுத்து உதவு மாறு வேண்டுகோள் விடுத் தான். கோவில்களிலும் சத் திரங்களிலும் மற்றும் மக்கள் அதிகமாக நடமாடும் இடங் களிலும் உண்டிகளை வைத்து அவ்வுண்டிகளில் தங்கள் சக்திக்கேற்பப் பணம் போடு மாறு சாதாரண மக்களையும் கேட்டுக் கொண்டான். தங்கள் தாய்நாட் டின் சுதந்திரத்தைக் காப்பதன் பொருட்டு எண்ணற்ற வாலிப வீரர்கள் அரசனுக்கு உதவிபுரிய மனமுவந்து வந்தனர். தனவந் தர்கள் பொன்னும் பொருளும் கொடுத்து உதவினர். சாதாரண மக்கள் தங்களால் இயன்ற தொகையினை உண்டியலில் அன்று டம் செலுத்தி வந்தனர். இவனும் தான் பிச்சை எடுத்த பொருளில் தன் தேவைக்குக் குறைவானதாய் இருந்தாலும், அத்தேவை யினை இன்னும் குறைத்துக் கொண்டு சில காசுகளை அவ்வுண்டியில் தினமும் போடு வான். போர்க்களத்துக்குத் தினமும் போய்க் காயமுற்று இருக்கும் வீரர்களுக்குச் சேவை செய்வான். பச்சிலைகளால் அவர்களின் காயங்களைப் போக்க முயலுவான். குவளை யில் தண்ணீர் கொண்டு வந்து அவர்களின் தாகத்தைத் தணிப்பான். இவ்விதம் சிறந்த சேவையை எவரும் செய்ய வற்புறுத்தா மலே தானே விரும்பிச் செய்தான். இவ்வித நற்செய்கைகளுக்காக இவனுக்கு இந்த லோகத்தில் என் பக்கத்தில் அமர்ந்திருக்கும் ஓர் உன்னத கௌரவம் அளித்தேன்.''

இவ்வுரையினைக் கேட்ட கடவுள் மற்றவர் களைப் பார்த்து, ''தேவர்களே! பூமியில் பண்ணிய புண்ணியத்தால் நீங்கள் இங்கு வந்தீர்கள். அங்கும் உண்ண உணவுக்கும், உடுக்க உடைக்கும் கவலை இல்லாமல்வாழ்ந்து வந்தீர்கள். ஆனால் இந்த ஏழைக்கோ தங்கும் இடம்கூட இல்லை. தன் உணவுக்கும் உடைக் கும் பிச்சை எடுத்தே பிறர் தயவை நாடித் தன் வாழ்நாளைக் கழித்தான். பிச்சை எடுத்த பொருளிலும் மிச்சம் வைத்துக் கொள்ளாமல் சில காசுகளையும் தன் தேச நலனுக்காக ஈந்தான். இந்த உலகில் போட்டி பொறாமைக்கு இடம் இல்லை. உங்களது சுக வாழ்வில் திருப்தி கொள்ளாமல், இவனது சுக வாழ்வில் வேறு பொறாமை கொண்டீர்கள். நீங்கள் அனைவரும் இப்பொறாமை குணத்துக் காகச் சில நாட்கள் நரகத்தில் தங்கி உங்களைப் பண்படுத்திக் கொள்ளுங்கள்'' என்றார்.

''எல்லாம் வல்ல இறைவனே!'' என்று குறுக்கிட்டான் பிச்சைக்காரன்.

''இந்தத் தேவர்கள் மீது கோபம் கொள்ளாதீர்கள். இவர்கள் அப்பாவிகள். எதற்காக இந்திரன் எனக்கு இந்த இடம் கொடுத்தான் என்பதை அறியார்கள்.



''ஐயோ.. நிச்சயமாக அடுத்த தீபாவளிக்கு ஒரு பட்டுப் புடவை என்ன!.... நாளை வாங்கிடறேன். கையை நீட்டேன் ப்ளீஸ்... ஐயோ! ப்ளீஸ்....!''

நீங்கள் சொன்னபடி, இவர் கள் போட்டி மனப்பான்மை யும், பொறாமைக் குணமும் தங்கள் கூடவே கொண்டு வரவில்லை. இவர்கள் இன்ப முடனே இது வரை இங்கு வாழ்ந்து வந்தனர். இப் புனித பூமியில் பொறாமை என்னும் வித்தை நான்தான் கவாமி கொண்டு வந்தேன். அது இவர்கள் மனத்தில் பயிராக்கப்பட்டு வளருவதற் கும் நானே காரணம். ஆகை யால், நானே தண்டிக்கப்பட வேண்டியவன். நானும் துர திர்ஷ்டமும் உடன்பிறந்தோர் ஆவோம். எப் போதும் என்னை நிழல் போல் தொடர்ந்து வரும் என் துரதிர்ஷ்ட சகோதரனை நான் மிகவும் நேசிக்கிறேன். இவர்கள் இங்கு இன்பமுடனேயே வாழட்டும். நான் நரகத் துக்குச் சென்று என்னுலான சேவையைச் செய்கிறேன். பாவிகள் நரகத்தில் எவரும் தேற்றுவாரின்றி உம்மாலும் புறக்கணிக்கப் பட்டு அல்லலுற்று இருக்கின்றனர். நான் அங்கே ஆறுதல் கூறித் தேற்றுவதில் இன்பம் காண்பேன். அங்கே பாவிகள் என் மீது பொறாமை கொள்ள மாட்டார்கள். மாறாக, என்னைப் பேராவலுடன் வரவேற் பார்கள். ஆகையால் இவர்களுக்குப் பதில் என்னை நரகத்துக்கு அனுப்பும்படி தாழ்மை யுடன் வேண்டுகிறேன்.''

சபையில் உள்ள அனைவரது கண்களும் இம்மொழியைக் கேட்டு அகல விரிந்தன. கடவுள் என்ன தீர்ப்பு அளிப்பாரோ என்று கவலையுடன் ஏங்கி நின்றனர்.

அமைதியாகக் கடவுள் அவனைப் பார்த்து, ''நல்லது. இதுவே உன் விருப்பமெனில் இதை நாம் தந்தோம். நீ போய் நரகத்தி லேயே என்றும் இருப்பாய்'' என்றார்.

அமரர் அனைவரும் ஒரே குரலில், ''ஆண்ட வனே! தயவுசெய்து இவரை நரகத் துக்கு அனுப்ப வேண்டாம். எம்முள் மூடிக் கிடந்த அறிவுக் கதவை இவர் திறந்தார். தான் என்ற மமதையும் கர்வமும் கொண் டுள்ள நாங்கள் இவர் மீது அநாவசிய மாகப் பொறாமைப்பட்டோம். இவரே எம்மைவிட மேலானவர் என்று இப்பொழுது உணருகிறோம். தயவுசெய்து இவரை எம் மிடமிருந்து பிரித்து விடாதீர்'' என்றனர்.

புன்முறுவலுடன் எம்பெருமான் பின்வரு மாறு கூறலுற்றார்: ''பொறாமை, கர்வம் போன்ற கெட்ட குணங்கள் தேவ லோகத் திலும் வளர விடாதவாறு கெல்லி எறிய வேண்டும். இதை வலியுறுத்தவே நாம் இங்கு வந்தோம். இந்த இடத்தில் நல்ல குணங் களுடன் இன்பமாகவும், அமைதியாகவும் வாழ வேண்டும். நீவிர் அனைவரும் ஒருவரை யொருவர் மதித்து அன்புடன் வாழ்ந்தால் எமக்கு இங்கு என்ன வேலை?''

சூத்திரதாரி இருந்த இடம் சூன்யமாய் விளங்கிற்று.




திருமுருக கிருபானந்தவாரியார்

## 31. சண்டிகேசுவரர்

திருச்சேய்ஞலூர் என்னும் திருத்தலம் மிகவும் சிறப்பு வாய்ந்தது. சூராதி அவுணரை அழித்து அமரரின் அல்லலை யகற்றும் பொருட்டு முருகப் பெருமான் திருக் கைலையினின்றும் தேரில் புறப்பட்டு, தேவர்களுடனும், பூத சேனைகளுடனும் தென் திசை நோக்கி வந்தார். சோழ நாட்டிலே மண்ணியாற்றின் தென் கரையில் வந்திறங்கிய எம்பெருமான் விச்வ கன்மனால் ஒரு திருநகரை உண்டாக்கினார். அங்கே சிவலிங்கம் ஸ்தாபித்துச் சிவபூசை செய்தருளினார். அதனால் இத்திருத்தலம் திருச்சேய்ஞலூர் எனப் பெயர் பெற்றது. திருச்சேய்ஞலூர் என்பது திரு சேய் நல் ஊர் எனப் பிரியும். இந்தத் திருத்தலத்தில் மறையவர் பலர் வாழ்ந்தனர்.

**செம்மை வெண்ணீற் றொருமையினார்;**
**இரண்டு பிறப்பின் சிறப்பினார்;**
**மும்மைத் தழலோம் பியநெறியார்;**
**நான்கு வேதம் முறை பயின்றார்;**
**தம்மை ஐந்து புலனும்பின்**
**செல்லும் தகையார், அறுதொழிலின்**
**மெய்ம்மை ஒழுக்கம் ஏழுலகும்**
**போற்றும் மறையோர் விளங்குவது.**

அத்திருத்தலத்தில் வாழும் மறையவர்கள் திருநீறு புனையும் ஒருமையினர்; உபநயனம் புரிந்து கொள்வதால் இரு பிறப்பின் சிறப்புடையவர்கள்; காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி என்ற மூன்று அக்கினிகளை வளர்க்கும் நெறியினர்; நான்கு வேதங்களைப் பயின்ற புலமையினர், ஐம்புலன்களும் செல்லும் வழியில் அவர்கள் செல்லாமல், ஐம்புலன்களும் அவர்கள் பின் தொடர்ந்து வரும் தகைமை வாய்ந்தவர்கள். அத்தகைய அந்தணர்கள் வேத வழியிலான அறு தொழில்களைப் புரிந்து வந்தனர். அதனால் ஏழுலகங்களும் அவர்களைப் புகழும்.

சோழ மரபில் வந்த மன்னர்கள் முடி சூட்டிக் கொள்வதற்குத் தகுதி வாய்ந்தவை என்று விளங்கும் ஐம்பெரும் பதிகளில் திருச்சேய்ஞலூரும் ஒன்று.

பண்ணின் பயன் நல்ல இசை. பாலின் பயன் இன்சுவை. கண்ணின் பயன் பெருகுகின்ற ஒளி. கருத்தின் பயன் பஞ்சாக்ஷரம். வேதத்தின் பயன் சைவம். இவைபோல் இந்த மண்ணின் பயன் திருச்சேய்ஞலூர் என்கிறார் சேக்கிழார்.

எச்சதத்தன் என்ற ஒருவன் இப்பதியில் மறையவர் குலத்தில் வாழ்ந்தான். பவித்திரை இவனது மனைவி. அப்பத்தினியின் திருவுதரத்தினின்றும் விசாரசருமர் திருவவதாரம் செய்தருளினார்.

ஒருவருக்கு அறிவு, நல்லொழுக்கம் முதலியன உண்டாவது முற் பிறப்பின் தொடர்ச்சியேயாம். ''முற் பிறப்புக் களிலே நல்ல மலர்களினாலே அருச்சித்து வழிபட்டதனால் இப்போது அடியேனுக்குப் பிரமாபுர மேவிய பெம்மான் அருள் செய்தான்'' என்று திருஞான சம்பந்தர் கூறுவார்.

**ஏடுடைய மலரான் முனைநாள்**
**பணிந்தேத்த அருள்செய்த**
**பீடுடைய பிரமாபுர மேவிய**
**பெம்மான்**

விசாரசருமருக்கு ஐந்து வயது நிரம்பியபோதே அவருக்கு முற்பிறப்புக்களில் இருந்த நல்லுணர்ச்சியின் தொடர்பினால் வேதாகமங்களின் உட்பொருளில் ஈடுபாடு ஏற்பட்டது. அரும்பில் அடங்கியிருந்த மணம் மலரில் வெளிப்படுவது போல் அவர் சிவாகம உணர்ச்சியை அடைந்தார்.

அவருக்கு ஏழு வயது நிரம்பியது. தந்தை உபநயனம் செய்து வைத்தார். குலவொழுக்கப்படி அவரை வேதம் ஓதுமாறு செய்தார். அவரோ ஓதுவிக்கும் ஆசிரியர்கள் கூறுவதற்கு முன்னமே உண்மைப் பொருளையெல்லாம் அறிந்தார்.

ஒரு நாள் விசார சருமர் வேதம் ஓதும் மாணவர் கூட்டத்தினுடன் சென்றார். ஆங்கு ஒருபுறம் ஊராருடைய பசுக் கூட்டம் போய்க் கொண்டிருந்தது. அதில் இளங்கன்றையுடைய பசு ஒன்று ஆயனைக் கொம்பினால் முட்டியது. அதனால் சீற்றம் கொண்ட ஆயன், சிறிதும் கருணையின்றி அப்பசுவைக் கோல் கொண்டு அடித்தான். அதைக் கண்ட விசார சருமர் கருணையினால் ஆயனை வெருண்டு பசுவை அடிக்கா வண்ணம் விலக்கினார்.

''பசுக்கள் உலகில் வாழும் உயிர்கள் எல்லாவற்றினும் மேன்மையும் பெருமையும் உடையன; எல்லா உயிர்களின் மலங்களும் அருவருப்புடையவை; ஆனால் பசுவின் சாணம் புனிதமானது. ஏனைய மலங்களின் அசுத்தத்தைப் பசுவின் சாணங் கொண்டு அகற்றுவர். பரமேசுரர் ஏறியருளும் இடப தேவருடைய திருக் குலம் பசு. பசுவினிடமிருந்து பால், தயிர், வெண்ணெய், நெய், மோர் முதலியன உண்டாகி மனிதர்களுக்குப் பெருஞ் சுகத்தைத் தருகின்றன. அரனார் திரு முழுக்குக்குப் பஞ்ச கவ்யம் உதவுகின்றது. கண்ணுதற் பெருமான் புனையும் திருநீறு உண்டாவதற்கு மூலமாகிய கோமயத்தைப் பசுக்கள் தருகின்றன.

''பசுக்களின் அங்கங்களில் சகல தேவர்களும் வாழ்கின்றனர். பசுவின் கொம்பினடியில் நாராயணரும், நான்முகனும் வாழ்கின்றனர். கொம்பின் நுனியில் கோதாவரி முதலிய தீர்த்தங்களும், சராசரமும், சிரத்தில் சிவபெருமானும், நடு நெற்றியில் பார்வதி தேவியும், நாசி நுனியில் முருகவேளும், உள் நாசியில் திசை பாலர்களும் வாழ்கின்றனர். செவிகளில் அசுவினிதேவர்களும், கண்களில் சந்திர சூரியரும் பற்களில் வாயு தேவனும், நாவில் வருண பகவானும் வாழ்கின்றனர். இதயத்தில் வாணியம்மையும், கபாலத்தில் இயமனும் இயக்கர்களும் உதட்டில் காலை, உச்சி, மாலை என்ற முக்கால தேவதைகளும் கழுத்தில் இந்திரனும், இடையில் அருக்க தேவ



**பத்து விஷயங்கள் விடை**

1. முறையே, மாடம் க்யூரி (Madame Pierre Curie) ஐரீன் க்யூரி ஜோலியட்.
2. உண்மை.
3. 5,875 டாலர்கள். இன்றைய ரூபாய் மதிப்புப்படி ஏறக்குறைய 44,060 ரூபாய். இதற்கு வரி கிடையாது.
4. வடக்கே திபேத், கிழக்கே சிக்கிம், மேற்கு வங்காளம்; தெற்கே பீஹார்; உத்தரப் பிரதேசம்; மேற்கே உத்தர பிரதேச ராஜ்யத்தைச் சேர்ந்த அல்மோரா ஜில்லா.
5. மேஜர் ஜெனரல், பிரிகேடியர், கர்னல், லெப்டினன்ட் கர்னல், மேஜர், காப்டன்.
6. அன்றுதான் இவ்விரு நாடுகளும் ஹிட்லரின் ஜெர்மனி மீது போர் தொடுத்திருப்பதாக அறிவித்தன. (இரண்டாம் உலக யுத்தம் ஆரம்பம்)
7. கடந்த ஜூலை 11ந் தேதி காலமான மாஸ்டர் விட்டல்.
8. 24.
9. டினோஸார். (Dinosaur)
10. தவறு. அலுவலகங்களில் இன்று நாம் உபயோகப்படுத்தும் இந்த மிருதுவான பொருள் உண்மையில் ஒரு பிராணியின் எலும்புக்கூடாகும்.

---

ரும், மார்பில் சரத்தியரும் வாழ்கின்றனர். நான்கு கால்களில் அநிலர்களும், முழங்காலில் மருத்துக்களும் குளம்பின் நுனியில் நாக உலகத்தார்களும், குளம்பின் நடுவில் கந்தருவரும் மேற் குளம்பில் தேவ மாதரும், முதுகில் உருத்திரரும், சந்துகளில் வசுக்கள் எண்மரும், அரைப் பரப்பில் பிதிர் தேவர்களும் பகத்தில் ஏழு கன்னியரும், குதத்தில் இலக்குமி தேவியும் அடி வாலில் அமரர்களும், வால் மயிரில் கதிரொளியும், வயிற்றில் பூமா தேவியும், மடிகளில் பெருங் கடல்களும், வயிறு, இதயம், முகம் என்ற மூன்று இடங்களில் காருக பத்தியம், ஆகவனீயம், தாக்ஷிணாக்கினி என்ற முத்தீயும், எலும்பிலும், சுக்கிலத்திலும் வேள்வித் தொழில்களும், எல்லா அவயவங்களிலும் கற்புடை மாதர்களும், நீங்காது வாழ்வார். இதை ஆயனுக்கு எடுத்துரைத்தார் விசாரசருமர்.

பசுவின் இரண்டு மடி அதன் கன்றுக்கும், இரண்டு மடி நமக்குமாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதனைப் புல்லுள்ள இடத்தில் மேய்த்தும் நல்ல நீரைக் குடிப்பித்தும், குளிர்ந்த நிழலில் உறங்குவித்தும், காப்பாற்ற வேண்டும். புனிதமான பசுக்களை மேய்த்துக் காப்பாற்றுதலே. எம்பிரானுடைய திருத்தொண்டாகும். இதனின் உயர்ந்த பணி இல்லை என்று திருவுளம் பற்றிய விசாரசருமர் ஆயனை நோக்கி, ''நீ இனிப் பசு காக்கும் தொழிலை விட்டு விலகுவாய்; யான் இனி இந்த ஆன் குலங்களை மேய்த்துக் காத்து வருவேன்'' என்று அருளினர். ஆயனும் அவரை வணங்கி யகன்றான்.

கோலும் கயிறும் கொண்டும், சிறிய குடுமியசைவும், மான் தோலும், புரிநூலும், மார்பில் புரளவும், இருவரையில் கோவணம் ஒளி செய்யவும் பாலும், பயனும் பெருகுமாறு பசுக்களை இனிய புற்கள் நிறைந்த தூய இடத்தில் மேய்த்து, நல்ல தண்ணீரைக் குடிப்பித்து, குளிர்ந்த நிழலில் உறங்குவித்து, தாய் போல் காத்தார். பால் கறக்கும் நேரத்தில் பசுக்களை அவரவர் இல்லங்களில் சேர்ப்பார்.

அன்புடனும், ஆதரவுடனும் இவர் பசுக்களை மேய்ப்பதனால் பசுக்கள் பெரிதும் மகிழ்ந்து இரவும் பகலும் இனிய பால் மடி பெருகச் சுரந்தன. அதோடு அழகு மிகுந்து செழித்து விளங்கின. ஆன் இனங்கள் வீட்டில் கன்றைப்பிரிந்து வருந்தாமல், மறைக் கன்றாகிய விசார சருமரைக் கண்டு உருகி, அன்பு பெருகிக் கனத்து மடி சுரந்து, கறவாமலே பால் பொழிந்தன. அதனைக் கண்ட அருளாளர் செம்மை நிறைந்த திருவுளத்தில் அவமே கழியும் பால் சிவமே பெறத் திருமஞ்சனம் புரிதல் வேண்டும் என்று எண்ணினர். எல்லாவற்றையும் இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதே அடியவர் கடமை அன்றோ? பண்டைத் தவ வலிமையினால் அவர் உள்ளத்தில் சிவ பூசையில் வேட்கை விளைந்தெழுந்தது.

மண்ணியாற்றங் கரையில் ஆத்தி மரத்தின் அடியில் மணலால் கோயிலும், சிவலிங்கமும் சமைத்தார். ஆத்தி மலரையும், நல்ல தளிர்களையும், அருகில் முல்லை நிலத்தில் பூத்துள்ள மலர்களையும் தாமே அன்புடன் ஒரு பூங்கூடையில் எடுத்து வைத்தார். நல்ல புதிய குடங்களைக் கொண்டு வந்து கறவைப் பசுக்களின் மடியைத் தீண்டியவுடன் பசுக்கள் பால் பொழிந்தன. மணலினால் நிறுவிய சிவலிங்க மூர்த்திக்குத் திருமஞ்சனம் புரிந்தார்; அருச்சித்து இனிய துதிகளைக் கூறி வழிபாடு புரிந்தார். அவரது அன்பு கலந்த பூசையை இறைவர் ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தார்.

இயல்பாகவும் விளையாட்டாகவும் விசாரசருமர் சிவபூஜை புரிந்து வந்ததை அயலான் ஒருவன் கண்டான். விசாரசருமரின் உண்மைத் திறத்தை அறியாத அவன், அதனை அவ்வூர்ப் பொதுச் சபையில் கூடியிருக்கும் அந்தணர்கட்கு அறிவித்தான்.

(தொடரும்)

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கெடுக்கிற, துவண்ட ரோமம



**இளமையில் வழுக்கை**
இக் நிலை ஏற்படுவதைப் பெரும்பாலும் தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த கலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்விஸ், தபால் பை 727, பம்பாய் 1.




**ப்யூர் சில்விக்ரின்**
கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கான நேராகத் தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**
நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படியவைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது.



# Silvikrin

**சில்விக்ரின் —கேச ஆரோக்கியத்திற்கான வழி**

# இப்படியும் அழைக்கலாம்!

## விவாஹ சுப முகூர்த்த ஸ்பெஷல் பத்திரிகை

நிகழும் பராபவ ஆண்டு ஆனி மாதம் 10-7-66 ஞாயிற்றுக்கிழமை உத்திரட்டாதி நட்சத்திரம் கூடிய சுப தினத்தில் காலை 6-20 -- 8-20 நேரத்தில் கடக லக்னத்தில்

| | |
|---|---|
| எனது ஜேஷ்ட குமாரி | ராஜாராணி புரம் ரங்கசாமி அவர்களின் |
| சௌபாக்கியவதி | கனிஷ்டகுமாரன் |
| **சௌந்தரவல்லிக்கு** | **ராமண்ணாவை** |

பாணிக்கிரகணம் செய்து கொள்வதாய் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு மேற்படி சுப முகூர்த்தம் மேடுபள்ள புரத்திலுள்ள என் கிரகத்தில் நடக்கின்றபடியால் தாங்கள் இஷ்டமித்திர பந்துக்களுடன் வந்திருந்து மேற்படி சுப முகூர்த்தத்தை நடத்தி வைத்துத் தம்பதிகளை ஆசீர்வதித்து என்னையும் கௌரவிக்க வேணுமாய்ச் சம்பிரதாயத்துக்காகக் கேட்டுக் கொள்கிறேன்.

| | |
|---|---|
| பரமசிவம் பெருமாள் தெரு | இப்படிக்கு தங்கள் விதேயன் |
| மேடுபள்ள புரம் | **சலசலப்பூர் சங்கரமூர்த்தி** |

அவசியமான பின் குறிப்புகள்:

(1) தயவுசெய்து அசட்டுத்தனமாகத் தங்கள் ரேஷன் அரிசி வகைகளை அனுப்பி வைக்காதீர்கள். நான் எத்தனையோ சிரமப் பட்டுக் கொஞ்சம் நல்ல அரிசியாகச் சேர்த்து வைத்திருக்கிறேன். அளவு குறைந்தாலும் தரம் உயர்வாக இருக்க வேண்டும் என்ற ஆசை எனக்கு. கறுப்புப் பணம் கொடுத்து வாங்கிய தூய வெள்ளை அரிசியுடன் வண்ண வண்ணமான மூன்றும்தர அரிசியைக் கலந்து டெக்னிக் கலர் சாப்பாடு போட நான் தயாரில்லை.

2. திருமணத்துக்கு வருகிறவர்கள் தயவு செய்து அவர்கள் தேவைகளுக்கேற்ப ஜமுக்காளம், தலையணைகள் கொண்டு வரும்படி வேண்டிக் கொள்கிறேன். சம்பந்தி விநியோகம் செய்வார் என்று எதிர்பார்க்க வேண்டாம். எங்கள் குடும்பத்தினருக்குத் தங்கள் தலையணை படுக்கைகளைத் தானம் வழங்கும் தியாக புத்தி கிடையாது. படுக்கைகளைத் தானம் செய்வது போல் பிறகு வரும் தலை வலியையும் தானம் செய்ய முடியாதே?

3. திருமணத்துக்கு வருபவர்கள் தங்குவதற்காக இரண்டு நண்பர்களின் வீட்டு மாடிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றன. மாடிப் படிகள் சற்றுக் குறுகலாகவும் செங்குத்தாகவும் அமைந்திருக்கின்றன. குழந்தைகளுடன் வருபவர்கள் கூடவே முதலுதவிப் பெட்டியையும் கைவசம் எடுத்து வருவது நலம். உள்ளூர் டாக்டர் விடுமுறையில் வெளியூர் போயிருக்கிறார். பக்கத்து ஆஸ்பத்திரி ஐந்து மைல்கள் தள்ளித்தான் இருக்கின்றது.



4. இந்த சீசனில் எங்கள் ஊரில் கிடைக்கும் காய்கறி வகைகள் கொத்தவரைக்காயும் சாம்பார் பூசணிக்காயும்தான். இரண்டு மூன்று வேளைச் சமையல்களில் இந்த இரண்டும் தேவைக்குத் தகுந்த உருவ மாற்றத்துடன் தோன்றும். இந்த இரண்டுமே வாயு பதார்த்தங்கள் என்று நினைப்பவர்கள் சற்று முன் ஜாக்கிரதையாக இருப்பது நலம்.

5. திருமணத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் நாதஸ்வரக்காரர் இன்னும் 'எல்' போர்டு மாட்டிக் கொண்டிருப்பவர். எந்தக் கீர்த்தனையை எந்த ராகத்தில் வாசிப்பது என்பதை இன்னும் நிர்ணயம் செய்ய முடியாதவர். கெட்டி மேளம் என்று குரல் கொடுக்கும்போது மாத்திரம் உற்சாகத்துடன் கொட்டி முழக்குவார். சங்கீத ரசனை உள்ளவர்கள் ஓரளவு சகிப்புத் தன்மையுடன் இருக்க வேண்டியது அவசியம்.

6. மேடுபள்ளபுரத்தைச் சுற்றிச் சுமார் முப்பதுமைல் வட்டாரத்துக்குள் எந்தவிதமான ஸ்தலங்களோ, பாடல் பெற்ற க்ஷேத்திரங்களோ, பொழுதுபோக்கு இடங்களோ கிடையா.

7. தாய்மார்களுக்கு ஒரு விசேஷ வேண்டுகோள். மாப்பிள்ளை அழைப்புக்காக ஒரு நண்பரிடம் கெஞ்சிக் கதறி 1920 வருட மாடல் ஃபோர்ட் இறந்த காரை யாசித்திருக்கிறேன். அதில் மாப்பிள்ளையைத் தவிர வேறு யாரும் அமரக் கூடாது என்ற நிபந்தனைக்கு உட்பட்

யிருக்கிறேன். ஆகையால், என் குழந்தைக்கு இடம், உன் குழந்தைக்கு இடம் என்று போட்டி போட்டுக் கொண்டு அந்தக் காரை ஒரு ஸ்கூல் பஸ்ஸாக மாற்றி அதில் மாப்பிள்ளையை ஒரு ஸ்டாண்டிங் பாசஞ்சராக மாற்றும் முயற்சியில் ஈடுபட வேண்டாம். என் நண்பர் குழந்தைகளை வெறுக்கும் கம்சன் அல்ல என்றாலும், அவருடைய ஆடி வந்த பழைய கார் இப்போது அதிகச் சுமையைத் தாங்கும் பாவிதனையிலில்லை. கார் மக்கர் செய்து விட்டால் ஊரில் வேறு கார் கிடையாது. மாப்பிள்ளை அழைப்பை மார்கழி மாதத்துப் பஜனை ஊர்வலம் போல் நடத்த வேண்டி வரலாம்.

8. எங்கள் ஊருக்குச் சில ரயில்கள் வந்து போகும் முக்கிய நேரங்களைக் கீழே காண்க:

| மேற்கிலிருந்து வரும் ரயில்கள் | கிழக்கேயிருந்து வரும் ரயில்கள் |
|---|---|
| காலை 4.00 மணி | காலை 4.30 மணி |
| காலை 5.25 மணி | காலை 5.50 மணி |

| மேற்கே போகும் ரயில்கள்: | கிழக்கே போகும் ரயில்கள் |
|---|---|
| பகல் 11 மணி | பகல் 1 மணி |
| பகல் 12.30 மணி | பகல் 2.15 மணி |

ரயில் நிலையம் ஊரிலிருந்து இரண்டு மைல் தொலைவில் இருக்கிறது. காலை நேரங்களில் மாட்டு வண்டிகள் அகப்படும். அந்த வண்டிக் காரர்களிடமே திரும்பிப் போகவும் அட்வான்ஸ் கொடுத்து ஏற்பாடு செய்து கொள்ளலாம். வண்டிக்காரர்கள் நாணய முள்ளவர்கள்.

9. உள்ளூர்த் தபால் ஆபீஸ் சுறுசுறுப்பாக இயங்குகிறது. கல்யாணத் தந்திகளைச் சேர்த்து வைத்து மொத்தமாக அனுப்பாமல் அவ்வப்போது அனுப்பி வைப்பார்கள்.

10. திருமணத்துக்கு விஜயம் செய்ய விரும்பும் உற்றார் உறவினர்கள் முன்கூட்டியே தகவல் கொடுக்கும்படியாக வேண்டிக் கொள்கிறேன். — **கோமதி சுவாமிநாதன்**



# ஊர் வம்பு

□ **விநோத தண்டனை!**

□ **மாத்திரைகளின் பலன்!**

**மி**ன்சாரக் கட்டணத்தைக் குறிப்பிட்ட கெடுத் தேதிக்குள் கட்டாவிட்டால் குறைந்த பட்சம் 25 காசு அபராதம் வசூலிக்கலாம் என்று ஒரு விதி அமுலில் உள்ளது. சரியான காலத்தில் தொகை வசூலாவதற்கான நல்ல விதியே இது.

கெடு தவறாமல் கட்டுபவர்களும் பல சமயங்களில் இந்தக் குற்றத்துக்கு ஆளாகிப் பல முறை அபராதத் தொகை கட்ட நேர்கிறது. எட்டு முறை கெடு தவறாமைக்காகவே அபராதம் கட்டி அனுபவப்பட்ட ஒருவர் எழுதுகிறார், தமது தரப்பில் உள்ள நியாயத்தைச் சுட்டிக் காட்டி விளக்கம் கேட்டால் மின்சார ஸ்தாபனத்தாரிடமிருந்து ஒன்று பதில் வருவதில்லை; அப்படியே வந்தாலும் தங்கள் தரப்பில் தவறு இல்லை என்பது போலப் பதில் வருகிறது என்று.

தங்கள் ஸ்தாபனத்தின் நல்ல பெயருக்கு இழுக்கு ஏற்படக்கூடாது என்று நினைக்கும் இவர்கள் ஒரு முறை பிப்ரவரி மாதத்துக்கு இருபத்தெட்டுத் தேதி என்பதை மறந்து முப்பது தேதியாக்கி அபராதத் தொகை விதித்தது சரியே என்று சாதித்தார்களாம். பின்னொரு முறை 17-8-66 என்று பில்லில் கொடுத்திருந்த கெடுத் தேதியை 12-8-66 ஆக மாற்றித் தங்கள் கட்சியில்தான் நியாயம் உள்ளது என்று அடித்துக் கூறிவிட்டார்களாம்.

தங்கள் ஸ்தாபனத்தின் நல்ல பெயரைக் காப்பாற்ற விரும்பும் இவர்கள் தனி மனிதனின் பேச்சிலும் நியாயம் இருக்கக் கூடும் என்பதை மறந்தோ அல்லது மறுத்தோ இம் மாத பில்லில் அபராதத் தொகையை ஐம்பது காசாக உயர்த்தியிருக்கிறார்களாம்.

**ச**மீபத்தில் பிரஞ்சுநாட்டில் இரண்டு இளம் டாக்டர்கள் ஆராய்ந்து கண்ட முடிவு இதோ: 'பிள்ளைகள் வேண்டாம் என்பதற்காகக் குடும்பக் கட்டுப்பாடு மாத்திரைகளை உட்கொண்ட பெண்மணிகளில் பெரும்பாலோரது தலைமயிர் உதிர்ந்து வழுக்கையாகி விட்டது. ஆண்களைப்போல் மீசை வளர்ந்து விட்டது.'

எனவே, இனி ஆண் பெண்ணாக மாறினான், பெண் ஆணாக மாறினாள் என்னும் செய்தி நமக்கு விசித்திரமாகப் படாது. பதிலாக, தலை வழுக்கை விழுந்த மீசை முளைத்த ஆண்கள் பிரசவித்திருப்பதாக அற்புதச் செய்தி வெளியாகலாம்.

அல்லது, உலகமே ஆண்கள் மயமாகிவிட்டதால், பல பிரசவ ஆஸ்பத்திரிகள் மூடப்பட்டு விட்டன என்றும் செய்தி வெளியாகலாம். அதன்பலனாக வேலையில்லாத் திண்டாட்டம் தலைவிரித்தாடலாம். இங்கு மறியல் அங்கு மறியல் என்று அடிக்கடி கேள்விப்படலாம்.

இன்னும் சற்றுக் கற்பனையை விரித்துப் பார்த்தோமானால், இனக்கவர்ச்சி இற்றுப் போய்விடும். நாடகங்கள், திரைப் படங்கள் தேய்ந்துவிடும். காதற் கற்பனைகள் கசந்து விடும்.

ஏவாளைப் படைத்துப் படைப்புத் தொழிலை நம்மிடம் விட்ட ஆண்டவனை மீறிச் செயல் பட முயன்றோமே, இப்பொழுது எப்படி உப்புச்சப்பற்ற இந்த வாழ்க்கையை வாழ்வது என்று இன்பத்தை நாடிய மனிதன் துன்பத்தில் உழல வேண்டியும் வரலாம்.

பயர்ஸ்டோனின் 'சூப்-ர்-டஃப்' விந்தை ரப்பர் டயர்களுடைய உழைப்பை மேன்மேலும் நீடிக்கச் செய்கிறது. இதனால் ஐயம் படுகிறது. இவைகளுக்கும் பூனைகளுக்குக் கூறப்படுவதுபோல



## ஒன்பது உயிர்களோ!

'சூப்-ர்-டஃப்' விந்தை ரப்பர் ஒவ்வொரு பயர்ஸ்டோன் டயருக்குள்ளும் அடங்கி, அவை அதிக மைல்கள் ஓடும்படி செய்கிறது. எந்த காரோட்டியும் சந்தோஷப்பட இது போதும். மற்றொரு சந்தோஷகரமான அம்சம்—எந்த வித மேற்பரப்புள்ள சாலையிலும், எத்தனை வேகத்திலும் உயர்ந்த நிலைப்புறுதிக்காக அதிகமான பரப்பளவு ரப்பர் சாலையில் பதியச் செய்யும், பயர்ஸ்டோன் கார் டயர்களிலுள்ள வியப்பூட்டும் 'ராப்-அரவுண்ட்' டிரெட் டிசைன். சந்தோஷ மிகுதியில் பூனை போல உறுமுகிறீர்களோ? செய்ய வேண்டியதுதான்!

**Firestone**

பயர்ஸ்டோன் "ராப்-அரவுண்ட்" டிரெட் கூடிய டீலக்ஸ் சாம்பியன் டயர்

பயர்ஸ்டோன் உங்களுக்கு தரம், உழைப்பு இவைகளின் சின்னம்.

STRONACHS R 72 A-TM

# வட்ட மேஜை

“காதி கிராமோத்யோக் பவனில் ‘ஜனதா ஸெட்’ என்று பத்து ரூபாய்க்கு ஒரு வேஷ்டி, சட்டை; கைக்குட்டை, பனியன், ‘அண்டர்வேர்’ முதலிய ஐந்தும் விற்கின்றனர். அதில் உள்ள வேஷ்டி 50'' அகலமும், மூன்றுமுழ நீளமும்தான் உள்ளது. நீளம் குறைவாக இருப்பதால் பெரியவர்கள் கட்டிக் கொள்ள முடியவில்லை. அகலம் அதிகமாக இருப்பதால் சிறுவர்களும் உடுத்திக் கொள்ள முடிவதில்லை. கடையின் மீது உள்ள நம்பிக்கையில் 50'' அகலம் இருப்பதால், நீளமும் நான்கு முழம் இருக்கும் என்று நினைத்தோம். வீட்டுக்கு வந்து பார்த்தபோதுதான் நீளம் போதாது என்று தெரிய வந்தது. இதை இப்பொழுது எதற்கு உபயோகப்படுத்துவது என்று புரியவில்லை!

சென்னை
31–10–66 எஸ். கிருஷ்ணமூர்த்தி

தேவதானப்பட்டியில் ஸ்ரீ மூங்கிலணை காமாட்சி அம்மன் ஆலயம் தனிச் சிறப்புகள் பெற்று மிளிர்கிறது. காஞ்சிபுரத்திலிருந்து அசுரனொருவனை (வஜ்ரதந்தன்) சம்ஹாரிக்க வந்த அன்னை, கன்னி உருவில் மூங்கில் புதரில் தவம் செய்வதாக ஸ்தல புராணம் கூறுகிறது.

இங்கு கர்ப்பக்கிருகம் அமைந்துள்ள கோவிலுக்கு முன்புள்ள அடைத்த கதவுக்கே பூஜை செய்யப்படுகிறது. இக்கதவைத் திறந்து உள்ளே செல்வது கிடையாது. கோவிலில் ஸ்ரீ அம்பிகைக்குச் சிலை உருவமோ, உலோக விக்கிரக மூர்த்தமோ கிடையாது. அன்ன நைவேத்தியம் கிடையாது. உடைக்காத முழுத் தேங்காயும், உரிக்காத வாழைப் பழமும்தான் நிவேதிக்கப்படுகின்றன. நெய் தவிர வேறு தீபங்கள் ஏற்றப்படுவதில்லை. ஆண்டு முழுதும் தேவையான நெய் தேவஸ்தானத்தினரால் வழங்கப்படுவதில்லை. சிவராத்திரியை அடுத்து வரும் உற்சவத்தின்போது சுமார் நாற்பது பெரும் பானைகளில் உபயநெய் நிரப்பி வைக்கப்படுகிறது. ஆண்டு முழுதும் இவ்வாறு சேமித்து வைக்கப்படும் நெய்யில் ஓர் ஈயோ அல்லது எறும்போ ஏழுமிருப்பதைக் காணும் ஒவ்வொருவருக்கும் ஸ்ரீ அம்பிகையின் அருட் சக்தி நன்கு விளங்குகிறது.

இக்கோவிலுக்குத் திருப்பணி வேலைகள் தொடங்கப்பட்டுள்ளன. கடந்த 19-8-66ல் உயர்திரு பி. டி. ராஜன் அவர்களால் திருப்பணி தொடங்கி வைக்கப்பட்டுள்ளது. திருப்பணி சிறப்பாகப் பூர்த்தியுற அன்பர்களைத் தாராளமாகப் பொருளுதவி புரிந்து அன்னை காமாட்சியின் அருளுக்குப் பாத்திரர்களாகக் கோருகிறோம்.

செயலாளர், பொருளாளர், ஸ்ரீ மூங்கிலணை காமாட்சி அம்மன் கோவில் திருப்பணி கமிட்டி, தேவதானப்பட்டி, பெரியகுளம் தாலுக்கா, மதுரை ஜில்லா.

திருச்சியில் உள்ள சூபர் மார்க்கெட்டில் நமது சைக்கிளுக்கு வேண்டிய டயர் டியூப் வாங்க வேண்டுமானால் கீழ்க்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டும்.

1. இந்த சொஸைட்டியில் பங்குத் தொகை செலுத்தி அங்கத்தினராகச் சேர்ந்திருக்க வேண்டும். 2. சைக்கிளுக்கு உண்டான லைசென்ஸ் கொண்டு வந்து காட்ட வேண்டும். 3. லைசென்ஸ் பெறுவதற்குக் கட்டிய தொகைக்கு ரசீதையும் கொண்டு வந்து காட்ட வேண்டும். 4. பழைய டயர் டியூபுகளைக் கொண்டு வந்து அதிகாரிகளிடம் காட்ட வேண்டும். 5. இன்றையத் தேதியில் இதே சூபர் மார்க்கெட்டில் ஐந்து ரூபாய்க்குக் குறையாமல் வேறு ஏதாவது பொருள் வாங்கியிருக்க வேண்டும். 6. புதிதாக அங்கத்தினர்களாக யாரையும் சேர்ப்பதற்கில்லை. இவ்வளவு நிபந்தனைகளும் பொருந்தியிருந்தால் ஒரு டயரும் ஒரு டியூப்பும் விலைக்குக் கொடுப்பார்களாம்! சைக்கிள் ஏழை எளியோரின் வாகனம். அதற்கு டியூப் டயர் வாங்க இந்தக் காங்கிரஸ் ஆட்சியில் இத்தனை அவதிப்பட வேண்டியிருக்கிறது!

திருச்சி
2–11–66 எஸ். கண்ணன்

விஜயதசமியன்று ஐக்கிய நாட்டு சபையில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி கர்நாடக இசைக் கச்சேரி செய்ததன் மூலம் பாரதத்தின் பெருமை டாலர் நாட்டில் பன்மடங்கு பெருகி விட்டது.

பெரியவாளது மங்கள சுலோகத்தைப் படிக்கும்தோறும் மெய்சிலிர்க்கிறது. பிருஹதாரண்ய உபநிஷத்தில் தேவர்கள், அசுரர்கள், மானுடர்களுக்கு இமயத்து இடியோசையின் மூலம் பரம்பொருள் எடுத்தோதியது ‘தாம்யத தத்த தயத்வம்’ என்ற ஒலி.

விண்ணவரும் மண்ணவரும் இறைவனை நாடியபோது இறைவன், த, த, த என்று மும்முறை த்வனித்து உபதேசித்தார்: ‘கட்டுப்பாட்டுடன் வாழ வேண்டும்; ஈகையுடன் வாழ வேண்டும்; கருணையுடன் வாழ வேண்டும்’ என்பதே உட்கருத்து.

இன்றைய நிலைமையில் இம்மூன்று குணங்களும் குன்றி வருகின்றன. கருணையின்றிப் பகைமை பாராட்டும் உலகிற்கு இது தகுந்த உபதேசம். ஐ. நா. உலகத்தின் பிரதிநிதித்துவம் வாய்ந்த சபை. அங்கு இத்தகைய தத்துவம் அடங்கிய கருணைப் பாடலைப் பாடியது எவ்வளவு பொருத்தம்.

செகந்திராபாத்–26
11–11–66 சுபஸ்ரீப்ரியா

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.**
**Managing Editor: T. Sadasivam.**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon